

கம்பன்



# கம்பராமாயணக் காவலர்

## சா. கணேசன்

சிறப்புக்கட்டுரைகள்



அழப்பொழ



— வெளியீடு —
நெல்லை மாவட்டக்
கம்பன் கழகம் - பாளை.

# நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்

பாளையங்கோட்டை

---

| | | |
|---|---|---|
| புரவலர்: | | திரு. எம். எஸ். சுந்தரம் பிள்ளை பாளை. |
| தலைவர்: | ,, | K. S. கிருஷ்ண ஐயங்கார் M. A. |
| துணைத்தலைவர்: | ,, | T. அய்யாச்சாமி B. A., B. L. |
| செயலாளர்: | ,, | M. சுப்பிரமணியம் |
| இணைச்செயலாளர்: | ,, | S. ஹரிஹரன் |
| பொருளாளர்: | ,, | R. முருகையா B. A. |

# கம்பராமாயணக் காவலர்
## சா. கணேசன் அவர்களின்

வரலாற்றுச் சுருக்கமும் - அறிஞர்களின்
சிறப்புக் கட்டுரைகளும்






வெளியீடு :
நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்
பாளையங்கோட்டை.

26....3....83 காரைக்குடி கம்பன் விழாவில்
கம்பன் மணிமன்டபத்தில்
'கம்பராமாயணக் காவலர்' அமரர் சா. கணேசனுர் சிலை
திறப்பு விழாவில் வெளியிடப்பட்டது.

*முதற் பதிப்பு*

**அடக்க விலை ரூ. 1—00**

அச்சிட்டோர்
ஸ்ரீ கோபாலகிருஷ்ண அச்சகம்
திருநெல்வேலி சந்திப்பு.

# சிலை வணக்கம்

கோயில் பூசை: பேராசிரியர் இரா. இராதாகிருஷ்ணன் M. A.

# மலரின் இதழ்கள்



---

69-2

## காரைக்குடி கம்பன் கலைக் கோயிலில்
# சா. கணேசனார் சிலை பிரதிஷ்டை
## 26—3—1983



**தோற்றம்: 6—6—1908]** **[மறைவு: 28—7—1982**

எங்களுடைய வணக்கத்திற்கும், வழிபாட்டிற்கும் உரிய ஐயா, உங்களுக்குச் சிலை வைத்து வழி படுவதில் நாங்கள் புனிதமடைகிறோம்.

உங்களுடைய திருவுருவத்தைத் தத்ருபமாக வடித்துத்தந்த மயிலாடி கல்சிற்பக் கூட்டுறவுச் சங்கத்தின் தலைமைஸ்தபதி "சிற்பக்கலை மன்னன்'" திரு. K. நல்லதாணு அவர்களின் கைத்திறனைக் கண்டு வியக்கின்றோம். தங்களுடைய அன்பு முகத்தை இனி எப்போது காண்போம் என்று ஏங்கிக் கிடந்த கம்பன் பக்தர்களுக்கு தங்கள் திருவுருவச் சிலை ஒரு வரப்பிரசாதமாக அமைந்து விட்டது.

**கம்பன் கழகம் - பாளை.**

# கோயில் பூசை

(பேராசிரியர்: திரு. இரா. இராதாகிருஷ்ணன்)

பரதன் என்றோர் இராமன் அடிப்பொடி
சத்ருக்கனன் என்றொரு பரதன் அடிப்பொடி
கம்பன் என்றோர் இராமன் அடிப்பொடி
கணேசன் என்றொரு கம்பன் அடிப்பொடி

o o o

கம்பன் கவிதை அசை ஒவ்வொன்றினும்
கம்பனைத் தரிசித்த கம்பன் அடிப்பொடி
கம்பனின் பாதம் கண்டு படிவம் கண்ட கம்பன் அடிப்பொடி
கம்பனைக் கற்றே எல்லாம் கற்ற கம்பன் அடிப்பொடி

o o o

**கம்பன் கோயிலின் இந்த நூற்றாண்டுத் தலைமைப் பூசாரி**
**கம்பன் அடிப்பொடி**

o o o

சுதந்திர வேள்வித் தீயிலே குளித்துப் புனிதமாகி,
மரியாதையோடு சட்டை கழற்றி,
நேரம் சிறிதும் தப்பாமல்,
கம்ப ஆகமம் கண்டு கம்பனை உள்ளத்தில் நாட்டி,
தன் நாவால் கம்பன் பாடல்களையே மணியாய் ஒலித்து,
போற்றி இசைத்தவாறே தெளிந்த சித்தத்தால் பால்
அபிஷேகம் செய்து,
கம்பனின் செவ்விய மதுரம் சேர்ந்த சீரிய கூரிய தீஞ்
சொற்களையே தேனுக்கி மஞ்சனம் ஆட்டி
அழியா மணம் வீசும் கம்பன் கவிதைப் பொருளையே
சந்தனமாக்கிக் குளிர்வித்து
கம்பனுக்குக் கம்பன் பா ஆடை அணிவித்து,
கவிச் சக்கரவர்த்தி என்று திலகமிட்டு
கம்பன் அன்பர்கள் வரிசையாய்க் கொணர்ந்த மாலைகளைச்
சூட்டி
முன்னைத் தமிழர் நூற்பொருளைக் கம்பன் காட்டியவாறு கண்டு
சேகரித்துத் தூபமிட்டு,

வேத உபநிடதம் முதல் கம்பன் கண்ட தத்துவப் பொருளை
எல்லாம் திரட்டி நெய்யாக்கித் தீபம் காட்டி,
தன் பொருளை எல்லாம் கம்பனுக்கே படைத்து,
மன மலரால் வேறொன்றும் நினையாது கம்பனையே அர்ச்சித்து.
ஆசை எல்லாம் கற்பூரமாக்கி அத்தனையையும்
கம்பன் முன் சுட்டெரித்து,
அந்தக் கற்பூர ஒளி மேல் கை காட்டி
முதன் முதலில் கண்களில் ஒற்றிக் கொண்டு,
எல்லோரும் கற்பூர ஒளி பெறத் தட்டேந்தி வருகிறானே
அவன் எவன்?

கம்பன் கோயிலின் தலைமைப் பூசாரி —
கம்பன் அடிப்பொடி

o o o

கம்பன் வந்த பின் இராமனுக்குக் கோயில்கள் உண்டாயின
கம்பன் அடிப்பொடி வந்தபின் கம்பனுக்குக் கோயில்கள்
உண்டாயின,

இராமன் கோயில் வழிபாடுகள் எப்படியோ!
கம்பன் கோயில் வழிபாடு தப்பாது.

o o o

கம்பன் கோயிலுக்கு அர்ச்சகர்கள் வேறுபாடு இன்றி
"எல்லோரும்" என நியமனம் ஆயிற்று,
இனி, கம்பன் அடிப்பொடிக்குக் கோயில் வேண்டும்,
அர்ச்சகர்கள் மனுச் செய்யலாம்.

கம்பன் காப்பியத்திலே உண்மை ஈடுபாடு
ஒன்றே தகுதி

உள்ளத்திலே கோயில் எழுப்பி ஒரு மூலையிலிருந்து
வழிபாடு செய்தாலும் உரிய ஊதியம் உண்டு
சேர வாரீர்!

நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்
"முதல்" நியமனம் பெறுகிறது
அதன் பேறு.

# அமரர் திரு. கம்பன் அடிப் பொடி வரலாற்றுச் சுருக்கம்

திரு. ச. கம்பராமன், காரைக்குடி.

---

"கம்பன் அடிப் பொடி" என்ற பெயர், இந்தப் பாரத தேசத்தின் பெருமக்கள் வரலாற்றில் இடம் பெற்றுள்ள புண்ணியப் பெயர். தாய் தந்தையர் கொடுத்த பெயர் கணேசன் என்பதாகும். திரு. கணேசன் 1908 வருஷம், ஜூன் மீ, 6 ஆம் உ காரைக்குடியில் பிறந்தார். தகப்பனர் பெயர், முரு. வீர. சாமிநாதன் செட்டியார். தாயார் பெயர் - நாச்சம்மை ஆச்சி. பள்ளியில் படிக்கும் காலத்திலேயே திரு. கணேசனுக்குத் தமிழ்ப் பற்று அதிகம். வாலிபப் பருவம் அடைந்ததும் காந்திஜியின் தொண்டராக நாட்டு விடுதலைப் போராட்டத்தில் ஈடு பட்டார். அதனல் பள்ளிப் படிப்பு பாதிக்கப்பட்டது. இதை அறிந்த தாய் தகப்பனர், திரு. கணேசனருக்குத் திருமணம் செய்து வைத்தார்கள். மனைவி பெயர் மீனுட்சி ஆச்சி. இவர்களுக்கு ஒரே மகள். அன்னுரைக் காரைக்குடி திரு. சண்முகம் செட்டியார் அவர்களுக்குத் திருமணம் செய்து கொடுத்தார்கள். கவிச் சக்கரவர்த்தியின் மேல் உள்ள பாசத்தினல், மூன்ரும் பேரனுக்குக் கம்பராமன் என்றே பெயர் சூட்டியிருக்கிருர்.

1936ல் காரைக்குடியில் நடைபெற்ற தமிழ்நாடு காங்கிரஸ் மாநாட்டின் காரியதரிசியாக இருந்து திரு. கணேசனர் மாநாட்டினை மிகச் சிறப்பாக நடத்தினர்கள். அம் மாநாட்டில் மூதறிஞர் ராஜாஜி அவர்கள் எதிர்த்தும், 6 தீர்மானங்கள் நிறைவேற்றினர்கள். ஆங்கில அரசாங்கத்தால் அளிக்கப் பட்ட பட்டங்கள், பதவிகளைத் துறந்தவர்கள் தாம், காங்கிரஸ் உறுப்பினராகச் சேரத் தகுதி உடையவர்கள், ஏழை எளிய மக்களுக்கு இலவச உணவுத் திட்டத்தையும் கொண்டு வர வேண்டும் என்பன போன்ற தீர்மானங்கள் மிகவும் முக்கிய மானவையாகும்.

1938ல் கானடு காத்தானில், நடைபெற்ற காங்கிரஸ் பிரச்சாரக் கூட்டத்தில் கலந்து கொள்ளத் திருவாளர்கள் சத்தியமூர்த்தி ஐயர், டாக்டர் சுப்பாராயன், பாரிஸ்டர் ஜோசப், N. கிருஷ்ணமூர்த்தி போன்ற பெரும் தலைவர்களுடன் சென்ற போது, ஆங்கில ஏகாதிபத்தியம் கூட்டம் போட்டால் சுட்டு விடுவோம் என்று அறிவித்தது. கூட்டம் நடைபெறாத வண்ணம் பலரைக் கொண்டு தாரை, தப்பட்டைகளை வாசிக்கச் செய்து, இடையூறு செய்தார்கள். இதனைக் கண்ட சா. க. அவர்கள், "எங்கே, என்னைச் சுட முடிந்தால், சுடு பார்க்கலாம்" என வீர முழக்கமிட்டுச் சட்டையைக் கிழித்து எறிந்து விட்டுக் காங்கிரஸ் பிரச்சாரம் செய்த தீரத்தைக் கண்ட ஆங்கிலேய அரசு ஒன்றும் செய்யாது மலைத்துப் போய் விட்டது.

1939 ஏப்ரல் 4ல் காரைக்குடியில் கம்பன் கழகம் என்ற பெயரில் ஒரு இலக்கிய நிறுவனத்தை ஆரம்பித்துப் பாரெல்லாம், கம்பன் புகழ் பரவ, மூல காரணமாக விளங்கினார்கள். கம்பனிடத்தில் அளவிட முடியாத அளவிற்கு ஈடுபாடும், பக்தியும், கொண்டிருந்தார்கள். கம்பனில் கரை கண்டவராக இருந்தும், தாம் இன்னும் கம்பனை முழுதும் அறியவில்லை என வருந்தினார்கள். ஆங்கில மேல் நாட்டு அறிஞர்களுக்கும், கம்பனுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைத் தாம் ஓரளவு உணர்ந்திருந்தும், முற்றும் தெரிந்துகொள்ள வேண்டுமெனக் கருதிப் பேராசிரியர்கள் அ. சீ.ரா., S. மகராஜன், எஸ். ராம கிருஷ்ணன் போன்ற ஆங்கில மேதைகளையும், கம்பன் மேடைகளில் பங்கேற்கச் செய்து, கம்பனோடு மற்றவர்களையும் ஒப்பிட்டுக் காண்பிக்கச் செய்தார்கள். அங்ஙனமே, முதன் முதலாக பொன்னடை போர்த்தல், பட்டி மண்டபம், மேல் முறையீட்டுப் பட்டிமண்டபம், நற்றமிழ் முற்றம், இவர்கள் சந்தித்தால், போன்ற புதுமையான பாணிகளை உலகறியச் செய்தார். தம் வாழ் நாள் முழுதும் கம்பன் திருநாளை ஆண்டாண்டு காலமாக — சிறையிருந்த காலத்திலும் கூடத் தம் நண்பர்களைக் கொண்டு — கொண்டாடிய. பெருமகன். ஆரம்பத்திலிருந்தே கம்பன் திருநாள் செலவின் பெரும்பகுதியைத் தம் சொந்தப் பொறுப்பில் ஏற்று நடத்தி வந்தார்கள்.

1941 — 42ம் ஆண்டுகளில், தனி நபர் சத்தியாக்கிரகம் ஆரம்பித்துச் சுமார் 588 மைல்களை 66 நாட்களில்

நடந்து, காங்கிரஸ் பிரச்சாரம் செய்து, கடைசியில் சென்னையில் 15—7—41ல் கைது ஆனார்கள். அலிபுரம் சிறையில் 4 மாதம் சிறைவாசம் அனுபவித்த பின் விடுதலைப் பெற்றார்கள். பின் 42ல் தலைமறைவாகிக் காங்கிரஸ் பணியில் ஈடு பட்டார்கள். சென்னையில் இருந்து கொண்டே ரகசியமாக அரசாங்கத்துக்கு விரோதமான நடவடிக்கைகளில் தொண்டர்கள் ஈடு பட்டதால் அரசினர் 'சூட்டிங்' ஆர்டர் போட்டார்கள். இவருடைய நண்பர்களைத் துன்புறுத்தினார்கள். வீட்டின் பெரும் சொத்தினை ஜப்தி செய்தார்கள், நண்பர்களைத் துன்புறுத்துவதைத் தாங்காமலும், ராஜாஜி அவர்களின் யோசனையாலும், கடைசியில் போலீசில் சரணடைந்தார்கள். மீண்டும் அலிபுரம் சிறையில் 6 மாத காலம் சிறைத் தண்டனைப் பெற்றார்கள்.

1947. இந்திய அரசாங்கத்தின் சார்பாக மலேயா நாட்டிற்கு நல்லெண்ணத் தூதுக் குழுவின் தலைமைப் பொறுப் பேற்று இந்திய – மலேய சுமுக உறவிற்கு வழி கோலினார்கள்.

1948ல் காரைக்குடியில் டாக்டர் அழகப்ப செட்டியார் அவர்கள், கல்லூரி தொடங்க நினைத்த போதிலிருந்து டாக்டர் செட்டியாரின் வேண்டுகோளின்படி, கல்லூரிக்கு வேண்டிய நிலங்களை ஆர்ஜிதம் செய்தது முதல் சகல பணிகளையும் பங்கேற்றுக் கல்லூரியின் ஒவ்வொரு வளர்ச்சியிலும் முக்கியப் பொறுப்பேற்று டாக்டர் செட்டியாரோடு துணை நின்று ஆரம்பம் முதல், உறுப்பினராக இருந்து கடைசிக் காலம் வரை கல்விப்பணியில் சிறந்து விளங்கினார்கள்.

1957. காங்கிரஸ் கட்சியில், முன்னர் 1936ல் காரைக்குடியில் நிறைவேற்றிய தீர்மானத்தின்படி, ஆங்கில அரசாங்கம் அளித்த பட்டம், பதவிகளைத் துறக்காத ஒருவரைக் காரைக்குடி தொகுதி வேட்பாளராக நியமித்ததை எதிர்த்து ராஜினமா செய்து, காங்கிரசுக்கு எதிராகப் போட்டியிட்டுச் சொற்ப ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தார்கள். அத்தேர்தலில் சுயேட்சையாக நின்ற இவர்களுக்கு மூதறிஞர் ராஜாஜி, தேவர், ம. பொ. சி, ஜோதி பாசு, பி. ராமமூர்த்தி, கல்யாணசுந்தரம், அண்ணா, போன்ற பல கட்சித் தலைவர்களும் பிரச்சாரம் செய்தார்கள். இத் தேர்தல் தான் சா. க. அவர்களின் நேர்மையையும், ஒழுக்கத்தையும் உலகறியச் செய்தது.

1957ல், கம்பராமாயணப் பதிப்பு வெளியிட்ட மர்ரே அன் கோ திரு. ராஜம் அவர்களுக்குப் பேருதவியாக இருந்து, அது சம்பந்தமாக முடிவு செய்ய ஒரு குழு அமைத்து, அக்குழு வின் முதல் கூட்டத்தைக் கோபிச் செட்டிப்பாளையத்தில் கூட்டிப் பல தமிழ் அன்பர்களும் ஒன்று சேர வாய்ப்பளித்துப் பதிப்பா சிரியர் குழுவில் முக்கியமானவராக இருந்து, பணி நிறை வேறும் வரை, பாடங்களை நிர்ணயம் செய்து, அச்சுப் பதிக்கும் முறையைத் தேர்ந்தெடுத்து, முழுப் பொறுப்பும் ஏற்றுச் சிறந்த முறையில் நூல் வெளிவரக் காரணமாக இருந்த கம்பன் அடியார்களில் தலை சிறந்தவர்களாகப் பணியாற்றினார்கள்.

1962ல் சட்ட மன்ற உறுப்பினராகவும், 1972ல் மேல் சபை உறுப்பினராகவும், இருந்து பணியாற்றினார்கள். மதுரைப் பல்கலைக் கழகத்தில் ஆரம்ப ஆண்டுகளில் செனட், சிண்டி கேட், அகடமிக் கௌன்சில் உறுப்பினராக இருந்து, கல்விப் பணியாற்றிய பேரறிஞர்.

1966ல் மலேசியாவில் நடைபெற்ற முதல் உலகத் தமிழ் மாநாட்டில் தமிழக அரசின் சார்பில் பிரதிநிதியாகச் சென்று, சிற்பக் கலை பற்றி, அரிய பெரிய ஆராய்ச்சிச் சொற்பொழிவு செய்து, மேல் நாட்டாரின் நன் மதிப்பைப் பெற்று வந்தார்கள்.

1968ல் சென்னையில் நடந்த 2 ஆவது உலகத் தமிழ் மாநாட்டில் முதல் அமைச்சர் அண்ணா அவர்களின் வேண்டு கோளின்படி, கலைக் காட்சிக் குழுவிற்குத் தலைமைப் பொறுப் பேற்று, பல்லோரும் பாராட்டத் தமிழர் நாகரிகப் பண்பாடு, கலை, இலக்கியம், சமயம், பண்டைக் கால அணிகலன், இசைக் கருவிகள், ஆபரணங்கள், கோயில் வாகனங்கள், தேர், விலை மதிப்பற்ற கோயில் நகைகள், தங்க வெள்ளி வாகனங்கள் போன்றவற்றை இரவு பகலாக அலைந்து பல இடங்களிலிருந் தும் சென்னைக்குத் தக்க பாதுகாவலோடு, கொண்டு வந்து காட்சிப் பொருளாக வைத்துப் பின் வாங்கிய பொருட்களைப் பாதுகாப்போடு, திரும்பக் கொண்டு போய்ச் சேர்த்து நற்பெயர் பெற்றார்கள். மேலும் கையேடு என்ற தொகுப்பு நூல் ஒன்றி னையும் வெளியிட்டு, அதன் மூலம் தமிழர் சிறப்பைப் பல கோணங்களில் கண்டுகளிக்கும் வண்ணம் செய்தார்கள். அது ஒரு அரிய பொக்கிஷம்.

1968ல், தம் மணி விழாவினைக் கொண்டாட மறுத்து விட்டார்கள். நண்பர்கள் சிலர் மணிவிழாவிற்கெனப் பண வசூல் செய்ததையும் தடுத்த சா. க. அவர்கள் கடைசியில், நண்பர்கள் கட்டாயத்தின் பேரில், வசூல் செய்த பணத்தினைக் கம்பன் பணிக்கு என பெற்றுக்கொள்ள இசைந்து, தம் மணி விழாவினைக் கம்பன் மணிவிழாவாக எண்ணிக் 'கம்பன் அறநிலை' என்ற நிறுவனத்தை நிறுவிக் கம்பன் மணி மண்டபம் தமிழ்த்தாய் கோயில் முதலியன கட்டத் தம்மையே அர்ப்பணித்துக் கொண்டார்கள். ஆம். தம் பெயரையே தியாகம் செய்தார்கள். கர்ணன் தன் தர்மத்தின் பலனைக் கிருஷ்ணனிடம் தாரை வார்த்தது போல் கணேசன் என்ற தம் நாமத்தைக் கம்பனுக்குத் தாரைவார்த்து விட்டுக் கம்பன் அடிப் பொடி என மாறினார்கள்.

பிள்ளையார்பட்டி, சிக்கல், திருத்தணி, கரூர், திருவண்ணாமலை, காஞ்சி, போன்ற இடங்களிலுள்ள பெரிய கோயில்களில் கும்பாபிஷேகப் பொறுப்பை ஏற்று, ஆகம முறைப்படி பணியாற்றிய ஆகம சீலர்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் இராஜ ராஜன் நினைவாகச் சதய விழாவினைக் கொண்டாட அரசால் செயலாளராக நியமிக்கப் பெற்றுப் பெருவுடையாருக்கு எங்கும், என்றும், காணவொண்ணா வகையில் மிகப் பெரிய அபிஷேக ஆராதனைகள் நடைபெறச் செய்து, வரலாற்றுச் சிறப்புடைய மன்னனின் புகழ் பரப்பிய வரலாற்றுச் செம்மல்.

இளையாற்றன்குடியில் காஞ்சிமா முனிவர் அவர்களின் ஆஞ்ஞைப்படி "வித்வ சதஸ்" என்ற பெரிய மாநாட்டினை மிகச் சிறப்பாக நடத்தியதோடு, அந்தக் குக்கிராமத்தில் மேல்நாட்டினரும் தங்கும் வசதி செய்து உணவு, உறைவிடம், போன்ற சகல அம்சங்களையும் குறைவிலாது கவனித்துத் தொண்டாற்றிய பாங்கறிந்து, காஞ்சிப் பெரியவர்கள் "தொண்டர் குலசேகரன்" என்று பட்டமளித்துக் கௌரவித்தார்கள்.

1982ல், 5 ஆவது உலகத் தமிழ் மாநாட்டில் சிறந்த தமிழறிஞர்கள் பதின்மரில் ஒருவராகப் பாராட்டு பெற்றபோது பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி அவர்கள் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி வெள்ளித் தட்டு பரிசளித்தார்கள்.

இலக்கிய ரசனையாளர், பேச்சாளர், எழுத்தாளர், கவிஞர், கதாசிரியர், ஆராய்ச்சித் திறனுளர், அஞ்சா நெஞ்சர், சிற்ப – கட்டிட வல்லுனர், கோயிற் கலை அறிஞர், இயல் இசை நாடகம் கற்றுணர்ந்தவர், கல்வெட்டு ஆராய்ச்சியாளர், வரலாற்றறிஞர், சிறந்த அரசியல் பண்பாளர், ஒழுக்க சீலர், நேர்மையின் நெறியாளர், அச்சுக்கலை உணர்ந்தவர், சோதிட கணித வரலாற்றுறைஞர், விஞ்ஞானத்தில் மெய்ஞ்ஞானம் கண்ட மெய்யன்பர், நகைச்சுவையாளர், விருந்தோம்பலில் சிறப்பெய்தியவர், சமையல் கலையைக் கூட நன்கு உணர்ந்து பக்குவமாய்ப் படைத்தவர், செய்நன்றி மறவாத செம்மல், தமிழ் மரபுக்காவலர் — இங்ஙனம் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்கிய பெருமகன் — கம்பனை நன்கு அறிந்து, புரிந்து, பரிந்து விளக்கும் இந்த ஒளி விளக்கு, தன் புகழ் உடம்பை விட்டுக் கம்பன் திருவடி நிழலில் அமைதி அடைந்து விட்டது.



# பரம்பரையில் ஒரு பரம்பரை.

(டாக்டர், ஜஸ்டிஸ் மு. மு. இஸ்மாயில் அவர்கள்)

---

சுதந்திர வேட்கையும், தேசப் பற்றும் தமிழகத்தில் ஒரு புதிய பரம்பரையைப் படைத்தன. உண்மையில், இந்தப் பரம்பரை இந்திய நாட்டுப் பரம்பரையேயாகும்.

அடிமைப்பட்டு நலிந்திருக்கும் ஒரு நாட்டின் மக்களை உரிமை எழுச்சியும், விடுதலை வேட்கையும் உடையவர்களாக ஆக்குவதற்குப் பல்துறை முயற்சிகள் வேண்டும். ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது ஆதிக்கம் செலுத்துவதென்றால், ஏதோ இந்த ஆதிக்கம் அரசியல் அளவிலோ, நிர்வாகத் துறையிலோ மாத்திரம் நின்றுவிடும் என்று சொல்வதற்கில்லை. இன்னொரு நாட்டினர்க்கு அடிமையாக இருக்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் மக்கள் வாழ்வார்களேயானால் அவர்களுடைய கலை, பண்பாடு, இலக்கியம், நாகரிகம் அனைத்தும் கொஞ்சம், கொஞ்சமாக மறைந்து விடும். காரணம் என்னவெனில், அவற்றில் இவர்களுக்கு ஒரு பிடிப்பும், அவை பற்றிய ஒரு பெருமையும் இருக்குமாயின், அவை மேலும் மேலும் வளர்ச்சியுற அந்த வளர்ச்சியின் காரணமாக அந்நிய ஆதிக்கமே அசைவுற்று இறுதியில் அழிந்துவிடும்.

இதன் காரணமாகவே, ஆதிக்கம் செலுத்தும் அந்நியர்கள், அரசியல் அதிகாரத்தோடு தங்களுடைய நாகரிகத்தையும், கலையையும், பண்பாட்டையும் படிப்படியாக இந்த மக்களிடையே பரப்பி, அவற்றைப் பின்பற்றுவதில் கிடைக்கும் அரசியல் ஆதாயத்தின் காரணமாக அவற்றையே உயர்வானவையாகவும், பெருமையுடையவையாகவும் கொண்டு, தங்களுடைய சொந்த பண்பாடு, கலை, நாகரிகம் ஆகியவற்றை அடியோடு மறந்து விடுபவர்களாக ஆக்கிவிடுகிறார்கள்.

இந்தப் பின்னணியில்தான் அரசியலில் அடிமைப்பட்டிருக்கும் மக்களிடையே சுதந்திர உணர்வை வளர்க்க முற்படும் பொழுது அந்த மக்களுடைய பண்டைய கலை, நாகரிகம் பண்பாடு, இலக்கியம் ஆகியவற்றிற்குப் புத்துயிர் கொடுத்து

அவற்றை மறுமலர்ச்சி பெறச் செய்து, அவற்றைப் பற்றி மக்கள் புதியதொரு பெருமை உணர்வைப் பெறச் செய்வது அவசியமாகிறது.

இந்த அவசியத்தை உணர்ந்திருந்ததினுல்தான் ஆங்கிலேயரிடம் அடிமைப்பட்டிருந்த இந்தியர்களிடையே சுதந்திர உணர்வை வளர்க்க முற்பட்ட அரசியல் தலைவர்களும், தேச பக்தர்களும், சமூக சீர்திருத்தவாதிகளும் இந்திய நாட்டின் மொழிகளில் இருந்த பழம்பெரும் படைப்புக்களை மக்களுக்கு அறிமுகப்படுத்தி அதற்காகப் பாமர மக்களும் புரிந்துகொள்ளக் கூடிய வகையில் எளிய நடையில் எழுதவும், பேசவும் தொடங்கியதோடு, தற்கால அறிவு வளர்ச்சிக்கேற்பப் புதிய, புதிய நூல்களை எழுதவும், பழம் பெரும் இலக்கியங்களைப் படைத்த கவிஞர்கள், ஞானிகள் ஆகியவர்களுடைய பரந்த, விரிந்த அறிவை விளக்கவும் தலைப்பட்டனர்.

ஆங்கிலேய அதிகார வர்க்கத்தை எதிர்த்து இந்திய மக்களைச் சுதந்திரப் போராட்டத்தில் இயங்கும்படிச் செய்த முயற்சியின் போது, இந்தியாவின் பல மொழிகளும் — குறிப்பாக வங்காளமும், தமிழும் — புதியதொரு முனைப்பைப் பெற்றன.

தமிழகத்தில் சிறந்த தேசபக்தர்களாகவும், வீரத்தியாகிகளாகவும் திகழ்ந்த சுப்பிரமனிய சிவா, வ. வே. சு. ஐயர், வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய பாரதியார் முதலியவர்கள், சுதந்திர வேட்கை கொண்டு விடுதலைப் போராட்டத்தில் நேரடியாகப் பங்கு கொண்டதோடல்லாமல், சிறந்த இலக்கிய கர்த்தாக்களாகவும், ரசிகர்களாகவும் விளங்கினர். இவர்கள் தமிழல்லாத பிற மொழிகளையும் - ஆங்கிலம், பிரெஞ்சு உட்பட— கற்று அவற்றில் இருந்த இலக்கியங்களை ஆராய்ந்தது, தமிழில் இருந்த இலக்கியங்களை இன்னும் நுண்மையாக ஆராய்வதற்கும், அவற்றின் அழகையும், பெருமையையும் இன்னும் ஆழமாக நுகர்வதற்கும் உதவின.

இந்தப் பரம்பரையில் ஒருவராகத் தோன்றியவர்தான் காரைக்குடி அமரர் சா. கணேசன் அவர்கள். சிறு வயதிலேயே தேசத்தின் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர். அப்படி

அவர் ஈடுபட்ட காலத்தில் காந்திய சகாப்தம் தோன்றிவிட்டது. அந்த அறக்குரலுக்குச் செவி சாய்த்துப் பதினெட்டு வயதில், அதில் தம்மைப் பிணைத்துக் கொண்டவர். அதன் காரணமாகச் சிறைக்கும் சென்றார்.

தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த பற்று கொண்டவர். பலமுறை சிறை சென்றதினால், தம் போன்ற வேறு சில தேச பக்தர்களையும் சிறையில் சந்திக்கும் வாய்ப்பு அவருக்குக் கிட்டிற்று. ஓர் இலட்சியத்தினால் ஈர்க்கப்பட்டு, அந்த இலட்சியத்திற்காகவே சிறைக்குச் சென்றவர்களாகையால் அங்கே அவர்களிடையே வம்புக்கோ, வீண்பேச்சுக்கோ இடமில்லை. அவர்களுடைய சிந்தனையும், சொல்லும் நாட்டைப் பற்றியும், நாட்டு நடப்பைப் பற்றியும், இந்திய சமுதாயத்தின் நிலைமையைப் பற்றியுமானவையாகவே இருந்தன. ஆகையால், அரசியல், சமயம், இலக்கியம், தத்துவம், ஆகியவை பற்றி அவர்களிடையே கருத்துப் பறிமாறல், பேச்சு, விவாதம், பயிற்சி ஆகியவை நிறைந்திருந்தன. இந்தச் சூழ்நிலையில், தாம் பயின்றிருந்த தமிழிலக்கியங்களிலுள்ள பெருமைகளையெல்லாம், தம்முடன் இருந்தவர்களுக்குத் திரு. சா. கணேசன் விளக்கினார். இதன் காரணமாகத் தமிழ் இலக்கியங்களில் ஆர்வமும், ஈடுபாடும் பெற்றவர்கள் பலர்.

திருக்குறள், தேவாரம், திருவாசகம், நாலாயிரம் ஆகிய நூல்களோடல்லாமல், சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, கம்ப ராமாயணம் முதலிய காப்பியங்களிலும் அவருக்கு ஆர்வமும், பயிற்சியும் உண்டு. ஆனால், எல்லாவற்றையும்விட அவரை முழுமையாக ஆட்கொண்டது கம்பனுடைய ஒப்புயர்வற்ற இராம காதையேயாகும்.

கம்பனுடைய படைப்பை நுண்மையாகவும், முழுமையாகவும் அவரைப்போல் பயின்றவர்கள் மிகச் சிலரேயாவர். கம்பனுடைய படைப்பு அவரைக் கவர்ந்ததற்குப் பல காரணங்கள் இருக்க முடியும். கம்பனுடைய காப்பியத்தில் இல்லாத கவி மரபோ, ஞானமோ, சமய உணர்வோ, இறை பக்தியோ, விஞ்ஞான அறிவோ, பல்கலைச் செறிவோ வேறு எதிலும் இல்லை என்ற அசையாத நம்பிக்கையில், அழுத்தமாக நின்றவர் அவர். அவருடைய இந்த நம்பிக்கை, அறவே ஆதாரமற்றது

என்று சொல்வதற்கும் இல்லை. தன்னுடைய காலத்தில் இருந்த அனைத்து படைப்புகளையும் கம்பன் படித்திருந்தான் என்பதற்கு அவனுடைய காப்பியத்திலேயே எண்ணற்ற சான்றுகள் இருக்கின்றன. அவனுடைய இந்தப் பயிற்சியோடு, அவனுக்கு இயற்கையாக அமைந்திருந்த கவிதாவிலாசமும், கற்பனைத் திறனும், நுண்ணறிவும் ஒன்று சேர, அவனுடையபடைப்பாகிய இராமகாதை, எல்லாம் நிறைந்ததாக ஆகிவிட்டது.

பெரும்பாலும் கவிஞர்கள், தீர்க்கதரிசிகளாகவும் இருந்திருக்கிறார்கள். பிரபஞ்சத்தின் படைப்பைக் கூர்ந்து நோக்கிச் சிந்திப்பதிலிருந்து பிறப்பது, இந்தத் தீர்க்கதரிசனம். கம்பனுடைய உள்ளமோ மிகப்பரந்த உள்ளம். அந்த உள்ளத்தின் விசாலத்திற்கேற்ப அமைந்து விட்டது அவன் பாடத் தேர்ந்தெடுத்துக் கொண்ட கதை. பரப்பினால் பரத கண்டம் முழுவதுமல்லாமல், இலங்கையையும் தன்னகத்தே சேர்த்துக் கொண்டிருக்கிறது அது; காலத்தினால் இராமனுடைய அவதாரத்திற்கு முன் தொடங்கி, இராவண வதத்திற்குப் பின், இராமன் முடிசூட்டிக் கொள்ளும் வரையில் தொடர்கிறது; பாத்திரத்திலோ மனித இனத்தில் சக்கரவர்த்தியில் இருந்து தொடங்கி வேடுவன் வரையில் தன்னுள் அடக்கிக் கொள்வதோடல்லாமல் அரக்கன், விலங்கு, பறவை முதலிய இனங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. அத்தகைய கதையை விரிவாக ஒரு காப்பியமாகப் பாட வேண்டுமானால் பல்துறை அறிவு செறிந்திருக்க வேண்டுதல் இன்றியமையாததாகிறது. கம்பனிடமோ இந்த அறிவுச் செறிவு அபரிமிதமாக இருக்கவே, அவனுடைய படைப்பு அளப்பரும் கருவூலமாக அமைந்து விட்டது. அத்தகைய கருவூலத்தில், அமரர் கணேசன் தன்னையே பறிகொடுத்துவிட்டதில் வியப்பில்லை என்றே சொல்லத் தோன்றும்.

கம்பனிடத்தில் அவர் வைத்திருந்த அளவற்ற ஆர்வமே அவரை வேறு பல துறைகளுக்கும் இழுத்துச் சென்றது. தொல்பொருள் ஆராய்ச்சியிலும், சிற்பங்களின் நுணுக்கங்களிலும் தம்முடைய அறிவைச் செலுத்தினார் அவர். கம்பன் வாழ்ந்த காலம், அவன் காலத்தில் ஆண்ட தமிழக மன்னர்கள், அவன் காலத்திய தமிழகத்தின் நிலைமை ஆகியவற்றையெல்லாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே இத்

துறைகளில் அவர் காட்டிய ஆர்வத்திற்குக் காரணமாகவும் இருக்கக் கூடும். ஆகம சாஸ்திரத்திலும் அவருக்கு ஆழ்ந்த ஈடுபாடு உண்டு. அதன் காரணமாகச் சமீப காலத்தில் தமிழகத்தில் உள்ள பல பெருங்கோவில்கள் புதுப்பிக்கப்பெற்று, புனருத்தாரணம் செய்யப் பெற்று, குடமுழுக்கு நடத்தப் பெற்ற பணிகளில் முக்கியமான பங்கை அவர் பெற்றிருந்தார்.

கம்பனிடத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு அளவிடற்கரியது. அவர் சம்பந்தப்பட்ட வரையில் கம்பன் தமிழில் மிகப் பெரிய கவிஞனாக மாத்திரம் இருக்கவில்லை. அவனைக் கடவுளாகவே அவர் கொண்டிருந்தார். கவிச்சக்கரவர்த்தி கம்பன் அவருக்கு 'எந்தை பிரான் கம்பன்' ஆவான். எனவே, 'சா. கணேசன்' என்னும் தம்முடைய பெயரையே 'கம்பன் அடிப்பொடி' என்று மாற்றிக்கொண்டார்.

கம்பனிடத்தில் அவர் கொண்டிருந்த ஈடுபாடு ஒரு புதிய பரம்பரையையே படைக்கும்படி அவரைச் செய்து விட்டது. தாம் படித்து மகிழும் கம்பனை, தாம் கொண்டாடும் அவன் பெருமையை, தாம் பாடும் அவன் புகழை உலகமும் நுகர வேண்டும் என்று விரும்பிக் கம்பன் கழகம் ஒன்றைத் தோற்றுவித்து, 1938-ம் ஆண்டிலிருந்து காரைக்குடியில் கம்பன் விழா கொண்டாட முனைந்தார். கம்பன் தன்னுடைய காப்பியத்தை அரங்கேற்றிய நாள் 'பங்குனி அத்தம்' என்று முடிவு கட்டி, அதற்கு முந்தின மூன்று நாட்களில் காரைக்குடியில் கம்பன் விழா கொண்டாடி, நான்காவது நாளான, அத்த நாளில், நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதிக்கு முன்னால் கம்பன் திருநாளைக் கொண்டாடினர்,

1938-ல் துவக்கிய இந்த வேள்வியைத் தம் ஆயுளின் இறுதி வரையில் ஓர் ஆண்டு கூடத் தவறாமல் செய்து வந்தார். சுதந்திரப் போராட்டத்தில் தாம் சிறை சென்ற போதும் தாம் சிறையில் இருந்த காலத்தில் இந்த விழா நடைபெறாமல் இருந்துவிடக் கூடாது என்பதற்காகத் தம் நம்பிக்கைக்குரிய பிறரைக் கொண்டு அதை நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார்.

காரைக்குடி கம்பன் விழா தமிழகத்தின், தமிழின் தனிப் பெறும் இலக்கிய விழாவாகவே காலப் போக்கில் அமைந்து விட்டது. அங்கு அவர் ஏற்றி வைத்த விளக்கு தமிழகத்திலும்,

வெளியிலும் பற்பல ஊர்களில் புதிய புதிய விளக்குகளை ஏற்றி வைப்பதற்கு உதவியது. அவருடைய அக்கறையினாலும், ஆர்வத்தினாலும், ஈடுபாட்டினாலும், ஈர்க்கப்பட்ட ஆயிரக்கணக்கான தமிழர்கள் கம்பன் காப்பியத்தைப் படித்து, அதில் மூழ்கி, மகிழ்ச்சியில் திளைத்து, அதனை மற்றவர்களோடு பகிர்ந்து கொள்வதற்காக ஊர்தோறும் கம்பன் கழகங்கள் தொடங்கினார்கள், கம்பன் விழாக்கள் நடத்தினார்கள். இப்படியாக, கம்பனுடைய பெருமையில் மூழ்கிய அமரர் கணேசனுடைய முயற்சி, கம்பன் இயக்கமாக மலர்ந்து, தமிழகம் மாத்திரமல்லாமல், தமிழகத்துக்கப்பாலும் இன்று பரந்து ஒளிவிட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இதில் ஈடுபட்ட அனைவரும் கம்பன் புகழ் பாடுபவர்கள் ஆகையினால், அவர்கள் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களைப் போலவும், அமரர் கணேசனை அக்குடும்பத்தின் தலைவராகவும் ஏற்றுக்கொண்டிருந்தார்கள்.

அமரர் சா. க. வின் கம்பன் பணி, வேறொரு வகையிலும் பலன் அளித்தது. அவர் நடத்திய கம்பன் விழாவின் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மண்டபம் முதலிய பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வதற்குப் பலர் தேவைப்பட்டனர். ஆரம்பக்காலத்தில் கம்பனை நன்றாகப் படித்திருந்தபண்டிதர்கள் பலர் இருந்த போதிலும், கம்பனுடைய காப்பியத்தின் அருமையையும், பெருமையையும் பாமர மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய வகையில் விளக்கக் கூடியவர்கள் மிக மிகச் சிலரே. ஆனால் சா. க. வின் நோக்கமோ கம்பனுடைய காப்பியத்தை எல்லா மக்களிடையேயும் பரப்புவது. ஆகையால் கம்பனைப் படித்து இந்தக் கோணத்தில் கம்பனைப் பற்றி எழுதவும், பேசவும் திறமையுள்ளவர்களைப் படைக்கவேண்டிய அவசியமாயிற்று. கம்பனில் சிறதளவு ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தாலும் அவர்களை அழைத்து, கம்பன் விழா நிகழ்ச்சிகளில் அவர்களுக்கு இடமளித்து, அவர்களுக்கு ஊக்கமூட்டி, உற்சாகப்படுத்தினர். இந்த வகையில் கம்பனைப் படிக்கவும், அவன் படைப்பைப் பற்றி எழுதவும், பேசவும் தகுதியும், திறமையும் பெற்ற பலர் உருவாக்கப் பெற்றனர். நாற்பத்தினான்கு ஆண்டுகளாகத் தொடர்ந்து நடந்து வந்த கம்பன் விழாவாதலால், இந்தவகையில் பலர் தோன்றினார்கள், அவர்கள் தங்கள் பங்காக, வேறு பலரையும் தோற்றுவித்தார்கள்.

சென்ற நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாகக் கம்பனைப் பற்றி எழுதியும், பாடியும், பேசியும் வரும் எல்லோரும் அநேகமாகக் காரைக்குடி கம்பன் விழா பெற்றெடுத்தவர்களே என்று சொல்வது மிகையாகாது,

இதே நிலையே வேறொரு அற்புதமான பலனையும் அளித்தது. மொழி, சமயத்திற்கு அப்பாற்பட்டது. இந்துக்கள், பௌத்தர்கள், சமணர்கள், கிறித்தவர்கள், முஸ்லீம்கள் ஆகிய பல மதத்தினரும் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டதன் காரணமாகவே, தமிழில் பெரும் அறிஞர்களாகவும், கவிஞர்களாகவும், இலக்கியக் கர்த்தாக்களாகவும் இருந்திருக்கிறார்கள். இன்றும் இருக்கிறார்கள். இவர்கள் அனைவருக்கும், சமய பேதமின்றித் தமிழ், பொது மொழியாவதோடு, தமிழ் இலக்கியங்கள் பொதுச் சொத்தும் ஆகும். இந்தக் கோணத்தில் பார்க்கும் போது, கம்பனின் காப்பியத்தில் எல்லா மதத்தினரும் ஈடுபட்டவர்களாகவே இருந்தார்கள். என்ற போதிலும், இராம காதை இந்துக்களின் கடவுளரின் ஒருவருடைய அவதாரத்தைப் பற்றியது ஆகையால், அது ஒரு இந்து சமய காவியம்; அதுவும் ஒரு வைணவ காவியம் என்ற எண்ணமும் இடம் பெறாமல் இல்லை. இந்த எண்ணமே தனித்து நிலைபடுமானால், இந்துக்களைத் தவிர அதுவும் வைணவர்களைத் தவிர— வேறு யாருக்கும் கம்பனுடைய இராமாயணத்தில் அக்கறையோ, ஈடுபாடோ கொள்வதற்கு இடமோ, வாய்ப்போ இல்லாமல் போய்விடும். இந்தக் குறுகிய நிலை கம்பனுக்கு ஏற்படக் கூடாது என்பதற்காக, கம்பன் விழாவில் கம்பனுடைய படைப்பு ஒரு சமய காப்பியமாக அணுகப்படாமல், ஓர் இலக்கியமாகவே அணுகப் பெற்றது. இதன் காரணமாகக் கம்பன் விழாவில் எல்லா சமயத்தினரும் தாராளமாக முழு மனதுடன் பங்குபெற ஒரு வாய்ப்பு உண்டாயிற்று. இதன் பலன் என்னவென்றால், கம்பனுடைய காப்பியத்தை மதபேதமின்றித் தமிழறிந்த அனைவரும் நுகர முடிந்தது; அதன் அழகையும், அருமையையும் அனுபவிக்க முடிந்தது.

இத்தகைய ஒரு பேரரங்கத்தைக் கம்பனுக்கு நிர்மாணித்துக் கொடுத்தவர் அமரர் சா. க. என்று சொல்வது முற்றிலும் உண்மை.

அமரர் சா. க. வின் தமிழ் ஆர்வம், இலக்கிய உணர்வு, கம்பன் பணி, தேசத் தொண்டு, தொல்பொருள் ஆராய்ச்சி, ஆலயக் கலையறிவு முதலிய பல்வேறு சிறப்புக்கள், அவருடைய வாழ்வை ஒளி நிறைந்த வாழ்வாக ஆக்கியதோடல்லாமல், வருங்காலத்தினர்க்கும் சிறந்த எடுத்துக்காட்டாவும், வழிகாட்டி யாகவும் அமைந்திருக்கின்றனவாகையால், இத்தகைய துறை களில் நன்றியுடனும், திறமையுடனும் அவரைப் பின்பற்றி அவருடைய பணியையும், தொண்டையும் மேலும் பரவச் செய் வதைத் தவிர அவருடைய நினைவுக்கு நாம் செலுத்தும் அஞ்சலி வேறெதுவும் இருக்க முடியாது.



# திரு. சா. கணேசன்

**திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள்**
தலைவர், காரைக்குடி கம்பன் அறநிலைக் குழு,
தலைவர்: கம்பன் கழகம் - கோவை.

திரு. சா. கணேசனை நான் முதன் முதல் எப்போது, எங்கே சந்தித்தேன் என்பது நினைவில்லை. ஆனால், அவர் அழுத்தமான ஒரு காங்கிரஸ் பக்தர் என்பதையும், மிகத் தீவிர மான காந்தியவாதி என்பதையும் அறிவேன். அவர் காரைக் குடித் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக இருக்கும் போது, மிக நீண்ட நாட்களாகவே, அவர் சட்டை அணிவதில்லை என்பதையும் கேள்விப்பட்டேன். 1957ல் காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்பட்டுக், காங்கிரஸ் சீர்திருத்தக்கட்சி, பொதுத் தேர்தலில் நின்றபோது, காமராஜ் தலைமையில் இயங்கிய காங்கிரஸ் வேட்பாளர்களைத் தேர்தலில் நிறுத்தி, ஆச்சரி யப்படத்தக்க நிலையில் வெற்றி கண்டார். அப்போது அவரைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு எனக்கு ஏற் பட்டது. அவர் நல்ல தமிழறிஞர் என்பதையும், நாகரிகமும் தெளிவான பண்பட்ட மொழியறிவும் உடையவர் என்பதையும் உணர்ந்தேன்.

ராஜாஜி அவர்கள், சுதந்திரா கட்சியை ஏற்படுத்திய போது, திரு. கணேசன் பெயர் அடிக்கடி கூட்டங்களில் குறிப் பிடப்பட்டது. ராஜாஜி அவர்கள் கணேசன் மீது பெருமதிப்பு கொண்டிருந்தார். சுதந்திரா கட்சி ஏற்பட்ட போது, தென் மாவட்டங்களில் கட்சி அமைப்பதில், இவர் முக்கிய பங்கை மேற்கொண்டிருந்தார். அரசியல் கட்சி அமைப்பதிலும், செயலாற்றுவதிலும், மிகுந்த அறிவும் அனுபவமும் அவருக்கு இருந்தது. ஒவ்வோரிடத்திலுமுள்ள தொண்டர்கள் பற்றியும், அவர்களுடைய திறமைகளைப் பற்றியும் பரந்த முறையில் அறிந்து வைத்திருந்தார், பொதுக் கூட்டங்களில், ஆளுங் கட்சியை ஆணித்தரமாக அவர் தாக்கிப் பேசுவதையும், அதே சமயத்தில் மிகவும் திறமையாக இலக்கியங்களிலிருந்து மேற் கோள்கள் காட்டுவதையும் பன் முறை கேட்டிருக்கின்றேன்.

அவரது பேச்சென்ருல் எப்போதும் நல்ல கூட்டம் இருக்கும். தேர்தல் கூட்டங்களிலும், பிரயாணங்களிலும் நாங்கள் பல முறை சந்தித்துப் பழகியுள்ளோம். அதனுல், நான் அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புகள் பல பெற்றேன். அவரது எளிமையையும், கொள்கையில் லட்சியமாக இருப்பதையும், எந்த வகையிலும் தம்மை உணர்ச்சிக்கு ஆளாக்கிக் கொள்ளாத தன்மையையும் கண்டு, அவரைப் போற்றினேன்.

சமய உணர்விலும், இலக்கியத்திலும், புராதனக் கல்வெட்டாராய்ச்சியிலும் — சிறப்பாகக் கம்பராமாயணத்திலும் அவர் கொண்டுள்ள ஆர்வம் மிகவும் ஆழமானது.

அவர் சுதந்திரா கட்சி மாநிலத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பணியாற்றியபோது, பெரும்பாலும் சென்னை அலுவலகத்திலேயே தங்கியிருந்தார். நான் ராஜ்யசபா உறுப்பினனுகத் தேர்ந்தெடுக்கப்பட்டேன். நான் சென்னை சென்ற போதெல்லாம், அவரது அலுவலகத்திற்குச் சென்று அவரிடம் பேசி மகிழ்வேன். அரசியல் பற்றிக் குறிப்பாகக் கதர் நூற்றல், சிறை வாழ்க்கை, அப்போதைய அரசியல் நிலைகளைப் பற்றிப் பேசுவோம். பிற மாநிலங்களில் சுதந்திரா கட்சியின் அன்றாட நடவடிக்கைகள் எனக்குத் தெரியாமல் இருந்தன. பிற மாநில நடவடிக்கைகள், அவை பற்றிய அவர் தம் கருத்து, அங்குள்ள தனி நபர் பற்றிய விளக்கங்களை யெல்லாம் விளக்குவார் அவர், தமது பொருளாதாரக் கருத்தில் ஆழமாக மூழ்க மாட்டார்; மாநிலப் பொருளாதாரச் சுமையைப் பற்றி எப்போதும் ஆராய்ந்து கொண்டே இருப்பார்.

ராஜாஜிக்குப் பிறகு சுதந்திரா கட்சி ஒற்றுமையின்றிக் கலைந்தது. திரு. கணேசனுக்கு அரசியலில் ஆர்வம் இல்லை. தம் முழு நேரத்தையும் கம்பனுக்காகவே தியாகம் செய்தார். நானும் அரசியலில் கொண்ட ஆர்வத்தை விட்டு விட்டேன். காரைக்குடி கம்பன் விழாவைப் பற்றிச் சிறப்பாகக் கேள்விப் பட்டேன். அவரும் என்னைப் பலமுறை அழைத்தார். நானும், சென்று காண முடிவு செய்தேன். என் முதல் எண்ணம் இலக்கிய ரசனையே ஆகும். அந்த இதிகாசத்திலிருந்து எவ்வளவு தெரிந்துகொள்ள வேண்டியதிருக்கின்றது என்பதே யாகும். திருவாளர்கள் தொ. பொ. மீனுட்சிசுந்தரம், கி. வா.ஜ.,

எஸ். ராதாகிருஷ்ணன், தமிழ்க்கடல் ராய. சொ., சீனிவாச ராகவன், கோதண்டராமன் போன்ற பல அறிஞர்களின் பேச்சுக்களை நான் கேட்டேன். அடுத்த ஆண்டு, அதற்கடுத்த ஆண்டு என்ற முறையில் காரைக்குடி விழாவிற்குச் சென்று வரலானேன். நீதிபதி இஸ்மாயீல் போன்ற பேச்சாளர்கள், இளந் தமிழ்க் கவிஞர்கள் கருத்துரைகளை அதிகமாகக் கேட்டேன். அந்நாளில் பத்துக்கும் மேற்பட்ட கம்பன் கழகங்கள் பல்வேறு நகரங்களில் தொடங்கப்பட்டிருந்தன. அகில இந்திய வானொலி நிலையம் கம்பன் விழா நிகழ்ச்சிகள் முழுவதையும் ஒலிபரப்பியது. கம்பன் கழகம், இலக்கியத் திற்கும், சமூக நலனுக்கும், பண்பாட்டுக்கும் பல ஆக்க வேலை களைச் செய்கிறது என்பதைக் கண்டேன். நானும் ஒரு கழ கத்தைக் கோவையில் தொடங்கினேன். என் தமிழ் மொழிப் பேச்சாற்றலையும் அறிவையும் — இதுபோன்ற விழாக்களில் பங்கு கொள்ளும் அளவிற்குப் — போதுமான அளவில் விருத்தி செய்து கொண்டேன்.

திரு. சி. வி. சி. டி. வெங்கடாசலம் செட்டியார் அவர்கள், காரைக்குடி கம்பன் நிறுவனத்தை வளர்ப்பதற்கு மிக்க அக்கரை கொண்டிருந்ததோடல்லாமல், நிதி உதவியும் செய் தார். கணேசனார் மணிமண்டபம் கட்டுவதற்கு ஆலோசனை கேட்கக் கோவைக்கு வந்திருந்தார். மணிமண்டபத்திற்கு ஓர் எதிர்பாராத விபத்து ஏற்பட்ட பின்புங்கூட, அவர் மணிமண்ட பத்தை முடிப்பதில் மிகுந்த உறுதிப்பாடு கொண்டு பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தார். அறநிலையத்திற்கு நிதி உண் டாக்க வேண்டுமென்று திரு. கணேசனும், திரு. வெங்கடாசலம் செட்டியாரும் விரும்பினர். கம்பன் விழா, நிற்காமல் தொடர்ந்து நடைபெறுவதற்குப் போதுமான ஒரு நிரந்தர நிதியை உண் டாக்க வேண்டுமென்று நானும் உறுதி செய்தேன். எனவே, நிறுவனங்கள், நண்பர்கள் ஆகியவர்கள் மூலம் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை பெற்றுக் காரைக்குடி கம்பன் அறநிலைக்கு ஒரு நிரந்தர நிதியை ஏற்படுத்தினோம்.

இதற்கிடையில் 1974ல் என் அறுபதாம் ஆண்டு நிறைவு மணி விழாவைக் கொண்டாட விரும்பினேன். செட்டி நாட்டார் இந்தச் சடங்குகளில் நன்கு துறைபோயவர்கள். ஆதலால் நான், சா. கணேசனிடம் எனது மணி விழாவை

வைதீக முறைப்படிச் சிறப்பாகச் செய்து கொடுக்குமாறு வேண்டிக்கொண்டேன். அவரும் முழு மனதோடு ஒத்துழைத்துக் கோவையில் விழாவை நடத்தி முடித்ததோடமையாமல், திருக்கடையூரிலும் திருநள்ளாற்றிலும் சிறப்பாகச் செய்து நிறைவேற்றினர். காஞ்சி, கும்பகோணம் போன்ற ஸ்தலங்களுக்குச் சென்றபோது, அந்தந்தக் கோவில்களின் ஸ்தல வரலாறுகள், தீர்த்தம், மூர்த்திகளின் பெருமைகள் ஆகியவற்றையும் கூடஇருந்து நன்கு புரிந்து கொள்ளுமாறு ஒவ்வொன்றையும் விளக்கிக் கூறினர். அப்பொழுதுதான், அவர் கோவில்கள், சிற்பங்கள், புராணங்கள், ஆகம சாஸ்திரங்கள் ஆகியவை பற்றிய ஒரு நடமாடும் கலைக் களஞ்சியம் என்பதை உணர்ந்தேன். அவர்பால் கொண்ட மரியாதை பன்மடங்கு உயர்ந்தது.

ஒவ்வொரு முறையும், அவர் கோவைக்கு வருகைதரும் போதெல்லாம், நாங்கள் அவரைப் பகலுணவிற்கும், இரவு உணவிற்கும் அழைப்போம். அப்பொழுது, என் மனைவி, மகள் ஆகியவர்கள், சமய சம்பந்தமான இனிய உரையாடல் விருந்தைப் பெறுவார்கள். அவர்கள் மனம் விட்டுப் பேசும் உரையாடல்களில், பல ஐயங்களைத் தெளிவு செய்துகொள்வார்கள். என் மகன் கரிவரதனின் திருமணத்தில் சமையல் ஏற்பாடு, பரிமாறுதல் போன்ற பொறுப்பு முழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டு நடத்திக் கொடுத்தார். இவ்வாறு ஒன்றுபட்ட மனம், நெறி, நோக்கம், விருப்பம், கொள்கை — ஆகியவற்றுடன் எங்கள் நட்பு என்னும் மலர் — அரசியலில் அரும்பிக் காரைக்குடி விழாவில் போதாகிக் கம்பன் விழாக்களில் மலர்ந்து, மணம் வீசத் தொடங்கியது.

கம்பன் அடிப்பொடி, சா. கணேசன் அவர்கள் என் வாழ்வில் மந்திரியாய், நல்லாசிரியனுய்ப் பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே நண்பனுய் அமைந்தார். வாழ்க அவர் திருநாமம் !

---

உ

ஸ்ரீ ராமஜெயம்

# திரு. கம்பனடிப்பொடி அவர்களின் அந்திய கால ஆசை

---

திரு. M. S. சுந்தரம் பிள்ளை அவர்கள், பாளையங்கோட்டை.
புரவலர், நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்.

---

திரு. அடிப்பொடி அவர்களிடம், சென்ற ஆறு ஆண்டுகளாக, நெருங்கிப் பழகும் வாய்ப்பு பெற்றேன். அதுவும் ஸ்ரீ ராமபிரான் திருவுள்ளம் என்றே நினைக்கின்றேன். 1978ஆம் ஆண்டு பாளையங்கோட்டையில் நடைபெற்ற கம்பன் கழகத்தின் ஆண்டு விழாவிற்கு அடியேனுடைய அழைப்பை ஏற்றுத் தலைமை தாங்க வந்திருந்தார்கள். அடியேன் இல்லத்தில் நான்கு நாட்கள் அவர்கள் தங்கும் வாய்ப்பும் பெற்றேன். நெருங்கிப் பழகி உரையாடவும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. எங்கள் கழகத்தின் புரவலர் திரு. பி. ஸ்ரீ. ஆசாரியா அவர்களும், அன்னாரை வரவேற்றுக் கலந்து பேச, அடியேனுடைய இல்லத்துக்கு வந்து விட்டார்கள். ஒரு நாள் முழுவதும் இருவரும் பழைய நினைவுகளையும், கம்பராமாயணத்திலுள்ள பல்வேறு சிக்கலான கட்டங்களையும் பற்றிக் கலந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

திரு. பி. ஸ்ரீ. அவர்கள் ஒரு சாய்வு நாற்காலியிலும், திரு. அடிப்பொடி அவர்கள் அன்னார் பக்கத்தில் ஒரு சிறிய நாற்காலியிலும் அமர்ந்திருக்க, நாங்கள் எல்லோரும் சூழ்ந்து, உட்கார்ந்து, அவர்களுடைய் பேச்சைக் கேட்டு ஆனந்தமடைந்தோம். இன்றைய டாக்டர் திருமதி. சரசுவதி ராமநாதன் அவர்களும், அன்னார் துணைவரும், திரு. கி. பக்ஷிராஜனும், மற்றும் பெரும்பாலான கம்பன் கழக உறுப்பினர்களும் எங்களோடு இருந்தார்கள். அன்று மதியம், யாவரும் சேர்ந்து

உணவு அருந்தியதும், திருமதி. சரசுவதி ராமநாதனும் என் துணைவியாரும் எல்லோருக்கும் பதார்த்தங்களைப் பரிமாறியதும் இன்றும் பசுமையான நினைவுகளாகவே இருக்கின்றன. திரு. பி. ஸ்ரீ. அவர்கள் இனிப்பு உட்பட எல்லாவற்றையும் ரசித்துச் சாப்பிட்டார்கள், திரு. அடிப்பொடி அவர்கள் அப்போதே ஆகாரக் கட்டுப்பாடு. இனிப்பைத் தொடவே யில்லை,

அன்று பிற்பகல் பேச்சில், அடியேன் திரு. அடிப்பொடி அவர்களிடம், அன்றைய மாலை விழாவில் "கம்பராமாயணக் காவலர்" என்ற பட்டத்தை அன்னாருக்குத் திரு. பி. ஸ்ரீ அவர்கள் வழங்க இருப்பதைக் கூறி, அதற்கென்று விசேஷ மாகச் செய்யப்பட்ட, கவிச் சக்கரவர்த்தி கம்பன் திருவுருவம் பதித்த தங்கப் பதக்கத்தையும் அன்னாரிடம் காட்டினேன். திரு. அடிப்பொடி அவர்களுக்கு முகம் சுருங்கிற்று. பட்டம் பதவிகளைத் தாம் விரும்பவில்லை என்றும், காவலர் என்ற பதம் அரசன் என்று பொருள்படும் என்றும், அதையும் தாம் விரும்ப வில்லை என்றும் மறுத்துச் சொன்னார்கள். திரு. பி. ஸ்ரீ. அவர்கள் தமக்கே உரித்தான பக்குவப்பட்ட பேச்சினால் 'காவலர்' என்ற சொல், ஆங்கிலத்தில் "வாட்ச்மேன்" என்று தான் அர்த்தம் தரும் என்றும், மேலும் காவல் நிலையம் என்று போலீஸ் ஸ்டேஷன்களுக்குப் பெயர் வைத்திருப்பது மக்களை யும், அவர்கள் உடைமைகளையும் பாதுகாக்க வேண்டியவர்கள் என்று பொருள்படுவதால்தான் என்றும், ஆகையால் இந்தக் "கம்பராமாயணக் காவலர்" என்ற பட்டம், தம்முடைய கையினால் அந்த விழாவில் அன்னாருக்கு வழங்கப்படுவதைத் தாம் பெரிதும் விரும்புவதாகவும் கூறினார்கள். அப்படி இருந்தும், இரு மனமோடுதான் தங்கப் பதக்கத்தை, அன்று விழாவில் ஏற்றுக்கொண்டார்கள். திரு. பி. ஸ்ரீ. அவர்கள் அன்னார் கழுத்தில், அந்தத் தங்கப் பதக்கத்தை அணிவித்தது, கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அதை இன்று நினைக் கும்போதும் மனம் பூரிப்பு அடைகிறது.

அன்று விழா முடிந்து, மறுநாள் காலை, பக்கத்திலுள்ள ஸ்ரீ கோபாலசுவாமி கோவிலுக்கு நாங்கள் இருவரும் சென் றோம. கோயிலுள்ளே நுழைந்ததும், ஸ்ரீ ஆஞ்சநேயர்

சிலையைத் தரிசித்தோம். அந்தச் சன்னதியில், ஸ்ரீ ஆஞ்சநேயர் துதி எழுதப்பட்ட கல்வெட்டு ஒன்று. பதிக்கப்பட்டிருக்கிறது. அது கம்பன் பாடல், அதை ஆர்வத்தோடு படித்து, அதிலுள்ள வாசகத்தில் சில திருத்தங்கள் சொன்னார்கள். கம்பன் காவியத்தில் அன்னார் கொண்டுள்ள உயர்ந்த பற்றுதலால், அவர்கள் கோயிலுக்குப் போகும் சமயங்களில்கூடக் கம்பனுக்கு ஒரு குறைபாடு வந்துவிடக் கூடாது என்று உன்னிப்பாகக் கவனித்து வந்தார்கள். தமது பழைய காலத்து அரசியல், இலக்கியத்துறை அனுபவங்களை அவர்கள் எடுத்துச் சொல்லும் போது, எங்களுக்கெல்லாம், கேட்கக் கேட்க மிக்க உற்சாகத்தைக் கொடுத்தன.

சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு முன், கம்பராமாயண உபந்யாஸம் என்றால் அங்கு மக்கள் கூட்டம் அதிகமாக வந்து விரும்பிக் கேட்பதில்லை. வடமொழி, தென்மொழி என்ற பிரச்சனைகள். கம்பன் காவியத்திற்கு ஒரு எதிர்ப்புக் கோஷ்டி வேறு உருவாகியிருந்த காலம். காரைக்குடியில் செட்டியார் வகுப்பைச் சேர்ந்த அனேகப் பெரியவர்கள் கூடத் தம்மிடம் இது பற்றிக் குறைப்பட்டுக் கொண்டார்கள் என்றும், அவ்வளவு எதிர்ப்புக்கும் தாம் எதிர்நீச்சல் அடித்துக் கம்பனையும் கம்பன் புகழையும் பரப்புவதில் அதிகச் சிரமப்பட்டதாகவும் கூறினார்கள்.

"கம்பன் புகழைப் பரப்பியதில், நெல்லை மாவட்டத்துக்கு முதலிடம் உண்டு" — என்று மன நிறைவோடு சொன்னார்கள். திரு இரா. பி. சேதுப்பிள்ளை, திரு. S. வையாபுரிப் பிள்ளை, திரு. தொ. மு பாஸ்கரத் தொண்டைமான், திரு. வெ. ப. சுப்பிரமணிய முதலியார், திரு. டி. கே. சி., திரு. பி. ஸ்ரீ. ஆசாரியா, திரு பால் நாடார், திரு. அ. ரா. சீனிவாசராகவன், திரு. கி. பட்சிராஜ ஐயங்கார் — இவ்வாறு பலபேர்களைப் பற்றி உற்சாகத்தோடு பேசினார்கள். காரைக்குடி கம்பன் மணிமண்டபம், தமிழ்த்தாய்க் கோயில் — இவை பிறந்த விதம், வளர்ந்த விதம், இன்னும் செய்ய வேண்டிய பணிகள், மற்றும் அதனால், தாம் கொண்டுள்ள மனக்கவலை பற்றியும் கூறினார்கள்.

கடந்த ஆண்டு (1982) கம்பன் விழாவுக்கு என்னால் காரைக்குடி போக இயலவில்லை. விழாவுக்குச் சென்ற எங்கள் கழகத்தாரிடம், என்னை எப்படியும் உடனடியாகப் பார்க்க

விரும்புவதாகத் திரு. அடிப்பொடி அவர்கள் சொல்லி அனுப்பி யிருந்தார்கள். அதன்படி நான் நாட்டரசன்கோட்டை நிறைவு நாள் நிகழ்ச்சிக்குச் சென்றிருந்தேன். அங்கு அரைமணி நேரம், என்னிடம் தனித்துப் பேசினுர்கள். அன்று இரவு நிகழ்ச்சி முடிந்ததும், என்னை இருக்கும்படிச் சொல்லித் தம் மனத்திலுள்ள பாரங்களை இறக்குவதுபோல் தம்முடைய அந்திய கால விருப்பங்களை ஒருவர் எப்படித்தெரிவிப்பாரோ, அதே மாதிரி, தாம் நோய்வாய்ப்பட்டுக் கஷ்டப்படுவதாகவும், இனி பிழைப்பது கஷ்டம் என்றும், கம்பன் மணி மண்டபம், தமிழ்த் தாய்க்கோயில் இவைகளின் வேலை பூர்த்தியாகாதது தமக்குக் கவலை தருவதாகவும், அறங்காவலர் குழுவில் அடியேனையும் ஒரு உறுப்பினராக நியமித்திருப்பதாகவும், தமது சொத்து சுகம் அனைத்தும் கம்பன் அறநிலைக்குத்தான் சொந்தம் என்றும், அறங்காவலர்க் குழு உறுப்பினர் அனைவரும் கம்பனுடைய பணியை என்றும் நல்ல முறையில் நடத்துவார்களென்று தாம் மனப்பூர்வமாக நம்புவதாகவும் மனக்கவலையோடு சொன்னுர்கள்.

இதுதான் நானும் திரு. அடிப்பொடி அவர்களும் கடைசியாகப் பேசிக் கொண்ட பேச்சு; கடைசிச் சந்திப்பும் இதுதான். அன்னுர் அமரர் ஆனபோது காரைக்குடிக்குச் சென்று மனக் கவலையோடு அஞ்சலி செலுத்தினேன். காரைக்குடி ஊர் மட்டும் அல்லாமல், தமிழ் நாடே திரண்டு வந்தது போல், அவ்வளவு திரளான கூட்டம். கட்சி வேறுபாடின்றி எல்லா அரசியல் வாதிகளும், இலக்கிய அன்பர்களும் ஒரே மேடையில் அன்னுர் சேவையைப் பாராட்டிப் பேசியது ஓரளவுக்கு மன நிறைவைக் கொடுத்தது.

இத்தகைய பெரியாரை இனி என்று காண்போம்? அன்னுருடன் கூடிப் பழகியதை நாங்கள் என்றும் மறக்க முடியாது, அன்னுருடைய இறுதி ஆசை — கம்பன் மணி மண்டபம். தமிழ்த் தாய்க் கோயில் வேலைகளைப் பூர்த்தி செய்வதே. அந்த ஆசையைப் பூர்த்தி செய்து, அவற்றை அன்னுர் திருவடிகளுக்குக் காணிக்கையாக்குவதே கம்பன் ரசிகர்களின் கடமையாகும். அன்னுர் ஆத்மா சாந்தியடையவும், அன்னுர் விட்டுப் போன பணிகள் நிறைவு பெறவும் ஸ்ரீ இராம பிரான் அருள்புரியப் பிரார்த்திக்கிறேன்.

---

# " கம்பனுக்கென்று ஒரு மானுடன் வாழ்ந்ததும் "

டாக்டர் சரசுவதி இராமநாதன் M. A., Ph. D.

"கம்பன் என்றொரு மானுடன்":- கம்பனுக்குப் பாரதி கொடுத்த மிகப் பெரிய பட்டம் "ஒரு மானுடன்" என்பதாம். ஆம்! மானுடம் வென்ற அவதாரமாம் இராமாவதாரத்தைக் கவினுறு குறிகளால் காட்டிய கம்பனை வாயார "மானுடன்" என்று புகழ்ந்து பாடினர். அதுபோல், கம்பன் புகழைப் பாடிப் பரவ என்றே வாழ்ந்த எங்கள் அண்ணன் கணேசன் "கம்பனுக்கென்று ஒரு மானுடன்" ஆகவே வாழ்ந்தார்.

"உருவத்திலே சிறியவளாய், ஊகத்தின் ஒன்றுமில்லேனுகித் தெருவத்திலே விளையாடிய பருவத்தில்" — அதாவது பத்து வயதிலேயே, தேவகோட்டைத் தமிழிசைப் பள்ளி மாணவி என்ற முறையில், கம்பன் கழகத்தில் இசை பாடி, என் பணியைச் செய்ய அழைக்கப்பட்டேன். "அன்றும் திருவுருவம் காணுது ஆட்பட்டேன்" — என்ற காரைக்கால் அம்மையின் வாக்குப் போல், அண்ணன் கணேசனைப் பார்த்திராதபோதே, கம்பன் பணியில் ஈடுபட்டேன். வந்து, கண்ட அப்போது, விழா நடத்தும் இந்த 'அதிசய மனிதர்' மீது பயம் கலந்த பக்தி ஏற்பட்டது. பின்னர் அது, பாசம் கலந்த பக்தியாக மாறலாயிற்று.

## அதிசயம்தான்!

"மகத்துப் பிள்ளை சகத்தில் அரிது" — என்பர். மக நட்சத்திரம் அற்புதமான நாள்மீன். அதில் தோன்றிய கணேசனும், அதிசய மனிதராகவே வாழ்ந்தார். பிள்ளையார் பட்டித் திருக் கோயில் பிரமுகரான இவருக்கு அந்தக் கற்பக விநாயகனும் கணேசனின் பெயரே அமைந்தது சிறப்பு! கம்பன் கழக மற்றப் பேச்சாளர்களைவிட எனக்குக் கணேச அண்ணனிடம் சலுகையோடு பேசும் உரிமையிருந்தது. காரணம், 'கடைக் குட்டி' யாக வந்தவள் என்பது ஒன்று; குடும்பத்தோடு நெருங்கிப் பழகியவர்கள் என்பதும் ஒன்று.

ஒரு முறை, வேடிக்கையாகச், "சா". கணேசன் என்ருல் நன்ருகத் தொனிக்கவில்லையே என்று பட்டென்று கேட்டு விட்டேன். இன்ஞெரு நாள் — "Saw" என்று ஆங்கிலத்தில் எழுதுகிறீர்களே, நீங்கள் (Saw mill) 'சா' மில் போல அறுவை செய்பவர்களா? — என்று கிண்டல் செய்தேன். (முன்பு ஆங்கிலத்தில் Saw. Ganesan என்று தான் கையொப்பமிடுவார். கம்பன் அடிப் பொடி என்று பின்னர், தன் பெயரை மாற்றிக் கொண்டார்.)

இந்த அளவு அண்ணனிடம் வாயாடுபவள் நான்தான் மற்றவர்கள் அந்த அளவு உரிமை எடுத்துக்கொள்ளத் தயங்கு வார்கள்.

### கம்பனே பேச்சு! கம்பனே மூச்சு!

திடீர் திடீரென்று நானும், என் துணைவரும் அவரைப் பார்க்கச் சென்று, மணிக்கணக்கில் அளவளாவுவோம். கம்பன், கல்வெட்டு, பிற இலக்கியங்கள், இயற்கை மருத்துவம், கோயில் குட நீராட்டு, இலக்கிய விழாக்கள் — இப்படிப் பலப்பல செய்திகளைப் பற்றி அவரிடம் பேசுவோம். எதையாவது மிகவும் இரசித்துவிட்டாரென்ருல், "சரியான கோமாளித்தனமாயிருக் கிறது!" என்பார். எப்போது போனுலும், கம்பனைப் பற்றிய நூல் எதையாவது படித்தவண்ணமிருப்பார்; அல்லது எழுதிக் கொண்டிருப்பார். ஒரு நாள் இரவு, எங்கோ சென்று திரும்பும் வழியில், அவரை எங்கள் ஊர் விழாவுக்கு அழைக்க உள்ளே சென்ருேம். 'வாங்க வாங்க' என வரவேற்று, "இந்தக் கம்பன் பய பண்ணுகிற அட்டகாசம்...." என்று இழுத்தார் சிரிப்புடன். அவர், தம் பெயரன் கம்பனைத்தான் (கம்பராமன்) சொல்லுகிருர் என நினைத்து, "ஏன்? என்ன செய்கிருன்?" என்கிருேம். "இந்தப் பய, என்ன அபார சக்தியோடு ஒவ்வொன்றையும் எழுதுருன் தெரியுமா?" என்ருரே பார்க்க லாம். அதன் பிறகுதான், "கம்பன் பயல் என்னும் அளவுக்குக் கம்பனில் ஒன்றி ஊறிப் பிணைந்து, உறவு கொண்டு விட்டார் என்பது புரிந்து சிரித்தோம்.

## கம்பனே ஆசான்.

அமரர், மோ. கோவிந்தராச அய்யங்கார் அவர்களே எங்கள் கம்பனடிப்பொடிக்குக் கம்பனைக் காட்டிய ஆசான். உள்ள வயலில் கம்பன் கவிதையாம் விதையிட்டு, விழாவெனும் நீர் பாய்ச்சிக், கழகமாம் உரமிட்டு வளர்த்துக் கொண்ட கம்பனடிப் பொடிக்கு எல்லாம் கற்பித்த ஆசான் கம்பனே. "என்னப்பன், என் ஆசான், எந்தை பிரான் கம்பன்" என்பார். உடல்நலம் மிகக் குன்றி, மூச்சுத் திணறி வேதனைப்பட்ட போதும், "அப்பா, கம்பா!" என்றார். "எந்தை பிரான் கம்பனும், அவன் வணங்கிய இராமனும்" என்று தான் சொல்வார். கம்பனே அவருக்கு எல்லாமாக இருந்தான். பள்ளிப் படிப்பு இந்தப் புள்ளிக்கு ஒருதவியும் செய்யவில்லை. அரசியல், பொருளியல், அறிவியல், வாழ்வியல், கலைகள் ஆகிய யாவற்றையும் கம்பனே கற்பித்தான். கம்பனில் ஆராய்ச்சி செய்பவர்கள், கல்வெட்டு ஆராய்ச்சி செய்பவர்கள், சிற்பத் துறையில் இறங்கியவர்கள், கோவில் கட்டும் தொழிலில் இறங்கினவர்கள், திருக்குட நீராட்டுச் செய்ய முற்பட்டவர்கள் — இப்படி அனைவரும் அண்ணனிடமே, அவரவர் துறை பற்றிக் கேட்டு, ஐயம் தெளிந்து செல்லுவரென்றால், அவரை 'நடமாடும் பல்கலைக் கழகம்' என நாங்கள் மதித்தது சரிதானே!

## விழாத் தலைவர்.

காரைக்குடியினைக் கம்பன் குடியாக்கி, விழா எடுத்து, அந்நகரின் புகழையும், கம்பன் புகழையும், புதுக்கிவிட்ட அண்ணனும், கம்பனின் அன்பர் நெஞ்சிலிருந்து விழாத் (விழாத) தலைவரே! சில காலம் காந்தியண்ணலின் அடித் தொண்டராக விளங்கிப் பின் அரசியலையே விட்டு நீங்கிவிட்டாலும், இறுதி மூச்சு வரை, காந்தீய நெறியிலேயே வாழ்ந்தார். இல்லறத்திலேயே இருந்தும் துறவியாக வாழ்ந்தமை, எளிய கதராடை, சட்டையிலாத் தோற்றம், தம் தேவைகளைத் தாமே கவனித்துக் கொள்ளல், எக்காரணத்தாலும் பொய் சொல்லாமை தம் தேவைக்காகப் பிறரைப் பொய்யாகப் புகழாமை, காலம் தவறாமை — இவையனைத்தும் இவரை இன்னொரு காந்தியாகக் காட்டின.

நாற்பத்தைந்து ஆண்டுகளாகக் கம்பன் கழகத்தைக் கட்டிக் காத்த அரிய செயல் இவருடையது. பல புலவர்கள் கம்பனைப் புரிந்து போற்றாத காலம் — எரிக்க முற்பட்ட காலம்- அந்தக் காலத்தில் விழா எடுத்தது, இவரது துணிவையும், கம்பனிடத்து இவர் கொண்டிருந்த ஈடுபாட்டையும் காட்டு கிறது. பங்குனியில் மகம், பூரம், உத்திரம் மூன்று நாட்களும் காரைக்குடியிலும், பங்குனி அத்தத் திருநாளில் நாட்டரசன் கோட்டையிலும் விழா நடக்கும். பார் அறிந்த விழா இது. விரத நியமத்துடன் பட்டினியோடு விழா நடத்தும் தலைவர் — இல்லை, இல்லை — 'செயலாளன்' (அப்படித்தான் சொல்ல வேண்டும் என்பார்) வேறு யார் இருக்க முடியும்?

## சிறையிலிருந்த போதும்...

விடுதலைப் போராட்டக் காலத்தில் சிறையிலிருந்த காலத்தும், தம் நண்பர்களைக் கொண்டு விழா, தடைபடாமல் நடைபெற ஏற்பாடு செய்தார். உயர்திரு. M. N. S. T, சிதம் பரம் செட்டியாரும் பிற அன்பர்களும் சேர்ந்து அப்போது விழாவை நடத்தினர் என்பர். தாம் வழிபடும் கம்பனும் இறை வனுக்குப் போற்றி அர்ச்சனை செய்யப் பாமாலை தொடுத்த அண்ணன் கம்பன் பாக்களிலிருந்தே சொல்மலர் எடுத்து, அன்பு நாரில் தொடுத்துக் கம்பன் போற்றியைப் பாடினார்.

"உன்னை உள்ள படியறியேம்
உலகை உள்ளத் திறம் உள்ளேம்
முன்னை யறியேம் பின்னறியேம்
இடையும் அறியேம் பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த
நெறியில் நிற்கும் அதுவல்லால்
என்னை அடியேம் செயற்பால
இன்ப துன்பம் இல்லானே."

என்ற பாடலையே கம்பனுக்குத் தமது அஞ்சலியாக்கினார்.

குலசேகரர், திருவேங்கடத்தில் 'ஏதேனும் ஆவேனே' என்று ஏங்கிப் பாடியது போல, இவரும் – கம்பனுக்கு நான் "படையேடாய் ஆகேனோ? பாற்குவளை ஆகேனோ? எழுத்தாணி

யாகேனோ? சுட்டு விரல் தொட்டருளும் சுண்ணும்பாயாகேனோ? அரியணையாய் ஆகேனோ? மிதியடியாய் ஆகேனோ?" என்றெல்லாம் ஆசை கொண்டு — பக்தி கொண்டு — பாடி "ஏதேனும் ஆக" வரம் கேட்கிறார்.

"முந்தையர்கள் அருள்நெறியை முழுதுமனு சரித்துவரும்
பிந்தையர்கள் கடைப்பிடிக்கப் பெருநெறியை நன்குணர்த்தும்
சந்தம்நிறை காப்பியத்தைத் தந்தருளுங் கம்பனெனும்
எந்தைபிரான் சன்னதியில் ஏதேனும் ஆகேனோ?

## கடைப்பொடி நான்.

கம்பனுக்குப் பக்தியுடன் விழா நடத்தும் அமைப்பு, வருபவரை உபசரிக்கும் திறன், பேச்சாளரைத் தாமே வந்து நேரில் பார்த்துப் பாராட்டி ஊக்குவிக்கும் அன்பு, தவறு கண்டால் — பேச்சில் கண்ணியம் குறைந்தால்—கடுகடுப்புடன் உடனே கண்டித்துவிடும் நேர்மை, கம்பனிடம் பக்தி, கம்பன் பணியில் அயராமை; இவையே நாங்கள் அவரைக் கம்பனுக்கென்று — ஏன்? கம்பனுக்கென்றே வாழ்ந்த ஒரு மானுடனை மதிக்கக் காரணங்கள்.

"கம்ப னடிப்பொடி சென்னியி லாடிடும்
உங்கள் கடைப்பொடி நான்."



## " கம்பராமாயணக் காவலர் கண்ட பரம்பொருள். "

(திரு. கி. பக்ஷிராஜன் B A., B. L., முன்னுள் தலைவர், நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்)

உலக மொழிகளில், மிகத் தொன்மை வாய்ந்தவற்றுள், தமிழ் மொழியும் ஒன்று என்பதும் அம்மொழியில் தோன்றிய இலக்கியங்களில் சிறந்தது, கவிச் சக்கரவர்த்தி, கம்பன் ஆக்கிய இராமாவதாரம் என்பதும், தமிழ் அறிவர்கள் தேர்ந்து, ஒப்பிமுடித்த முடிபாகும். அதனுலேயே, புதுமைக் கவிஞர் பாரதியார்,

" யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்குங் காணேம் " — என்றும்
" யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவன்போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்த தில்லை " — என்றும்

அந்த மூன்று புலவரிலும் கம்பனுக்குத் தலைமையிடமளித்தும் கூறி, இம் முடிவு, "உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை" — என அடித்துக் கூறிப் போந்தார்.

அந்தக் கம்பன் என்பவன் யார்? எங்கு, எப்போது, எப்பெற்றோர்க்குப் பிறந்தான்? யாரிடம் கற்றான்? இத்துணை அறிவும் புலமையும் எப்படிப் பெற்றான்? தெரிய வழியில்லை. பிறந்த இடம், திருவழுந்தூர் என்பது மட்டும், சற்று நிச்சய மாகத் தெரிகிறது. சமீபத்தில்தான், அவன் மறைந்த இ ம், நாட்டரசன் கோட்டை எனத் தெரிய வந்துள்ளது. அவனைப் பற்றியும், அவன் பெயர் பற்றியும், பின்னல் பல கதைகள் தோன்றியிருப்பினும், அவை வெறுங் கற்பனைகளே என்பதை இன்றையத் தமிழுலகம் நன்கறிந்து கொண்டிருக்கிறது.

என்னைக் கம்பராமாயணத்தில் புகுத்தியவர், நெல்லை இந்துக் கல்லூரித் தமிழ்த் துறைத் தலைவராயிருந்த திருவாளர் சுப்பிரமணியக் கவிராயரவர்கள் ஆவார். அக்காலத்தே, கம்ப ராமாயணம் எல்லோராலும் கற்கப்படவில்லை. நெல்லையில்,

பி. ஸ்ரீ., ரசிகமணி டி. கே. சி., வையாபுரிப்பிள்ளை போன்ற சிலராலும், நாஞ்சில் நாட்டில், கவிமணி மற்றும் செய்குதம்பிப் பாவலர் போன்ற சிலராலும் கம்பராமாயணம் பரப்பப் பெற்றது. சாதாரணத் தமிழர், மாணவர்களெல்லாம் கதை கேட்டவர்களே தவிரத் தமிழின்பம் துய்த்தவர்கள் என்று கூற முடியாது. நான், கவிராயரவர்களிடம் அவ்வப்போது விளக்கம் பெறுவேன். என் நற்காலம், எனக்குப் பி. ஸ்ரீ. அவர்களோடு தொடர்பு ஏற்பட்டது. அவர்கள் தாம், கம்பனை அணுகும் முறையை எனக்குக் காட்டியவர். அவ்வழியில் நான் கற்றபோதுதான், கம்பன் பரம்பொருளின் அருளால், மயர்வற மதிநலம் அருளப் பெற்றவன் என்ற உண்மை புலனாயிற்று. இம்மன நிலையில்தான், காரைக்குடி முதற் கம்பன் திருவிழா, முதல் நாள், திரு. சா. கணேசன் எனக்கு அறிமுகமானார். கூடிய முதல் நாளிலே ஒன்றிவிட்டோம். தனியே வெகுநேரம் உரையாடுவோம். கணேசனது தமிழ்ப் பற்றும், இலக்கிய அறிவும், தெய்வ பக்தியும் — அனைத்துக்கும் மேலாகக் கம்ப ராமாயணத்தில் அவருக்கிருந்த வெறியும், கம்பன்பால் பக்தியுணர்வும், என் உள்ளத்தே எழுந்த கம்பன் உருவோடு ஒத்தமையின் இருவரும் மனமொன்றிய நண்பரானோம்.

மற்றொரு முறை. கம்பன் திருநாளுக்கு நான் சென்றிருந்த போது, தமிழ் நாட்டில் அப்போது வன்மையாகத் தோன்றி விட்ட நாத்திக இயக்கத்தைப் பற்றி நாங்கள் விவாதித்தோம். திடீரென்று, ஒரு வெறி கொண்ட குரலில் திரு. கணேசனின் வார்த்தைகள் வெளி வந்தன. "என்னுடைய கம்பனை ஒருவன் பழிக்கவா? பக்ஷி! அவனது ராமாயணத்தை எரிக்கவா? இது என்னுடைய தமிழ்த் தாயை அவளுடைய மக்கள் முன்னிலையிலேயே நிறுத்தித் துகிலுரிவது போலல்லவா? அதைக் கண்டும், நான் சும்மா கிடப்பேனா? அப்படிச் செயலற்றுக் கிடக்க, நானொரு பாண்டவனில்லை, பக்ஷி. எப்படியும், தமிழன்னையின் மானம் காக்க உறுதி பூண்டேன். ஆனால், பிறரைப் போல் வன்முறை கொண்டு எதிர்க்க மாட்டேன். நான் காந்தி சீடன், அமைதியான முறையைத்தான் பின் பற்ற உன்னினேன். கம்பன் புகழையும், அவன் பாடிய ராமனின் அவதார மகிமையையும் தமிழ் நாட்டில் பறை யறைந்து பரப்புவதன் மூலம், தமிழன்னை, துகிலுரியப்படாமல்

காக்கத் திட்டமிட்டேன். அத்திட்டத்தின் முதற்படி தான் இக் கம்பன் திருநாள் தொடக்கம். நீயே பார், இத்திரு நாளை நான் ஒரு தமிழ்த் திருநாளாகக் கொண்டாடுவதன் மூலம், கம்பன் புகழும் காகுத்தன் காசில் கொற்றமும், தமிழனின் தெய்வ பக்தியும், நம்பிக்கையும் தமிழர் உள்ளங்களிலே வளருமென் பது என் முழு நம்பிக்கை" என முழங்கி ஓய்ந்தார்.

என் உள்ளத்தே வியப்பு ஒரு புறம், மகிழ்ச்சி. ஒரு புறம் ஆனால், திரு. சா. கணேசனால் இது முடியுமா? என்ற ஐயம் எல்லாவற்றுக்கும் மேலாகத் தலை தூக்கி, "ஆனால் .... " என்று கேட்க வைத்தது. "என்ன ஆனால்? சொல்லேன், ஏன் தயங்கு கிறாய்?" என்று சா. க. வின் ஆர்வம் மிகுந்த குரல் உறுமிற்று. "நாம் ஊக்கத்துடன் கம்பன் கவிதையையும் அவன் புகழையும் பரப்புவதில், முனைந்து செயல்பட்டோமானால், தன்னடைவே தமிழன் உள்ளம் சிந்திக்கும் — இத்தகைய கவிஞனையும், அவன் கவிதையையுமா எரிக்க முற்பட்டோம்? — என்று. தன் செயலுக்குத் தானே வருந்திக் கழிவிரக்கங் கொண்டு திருந்தி, உண்மைத் தமிழ் மகனாவான், இதில் எனக்குச் சந்தேகமில்லை" என்று கூறினார்.

இப்படித் தோன்றிய தீர்மானம், வருடந்தோறும் கம்பன் திருநாளைக் கொண்டாடும் முயற்சியாக மலர்ந்தது. ஏராளமான தமிழ் மக்கள் கூடிக் கம்பன் கவியமுதைப் பல தமிழறிஞர் மூலம், பருகி உள்ளம் களித்து வந்தனர், கம்பன் புகழும், அவன் பரம்பொருளாகக் கண்ட இராமபிரானின் காசில் கொற்றமும் தமிழ் நாட்டில் விரைந்து பரவத் தொடங் கின. கம்பன் விழா நிகழ்ச்சிகள், அகில இந்திய வானொலி யாரால் ஒலிபரப்பப் பெற்றன, கம்பராமாயணத்தைப் படிக்க வேண்டுமென்ற ஆவல் பலருக்கும் உண்டாயிற்று. ஆனால் நூல்கள் எளிதில் மலிவு விலையில் கிடைப்பனவாயில்லை.

இந் நிலையில் தான், தமிழிலக்கிய மோகங் கொண்ட மற்றொரு தவப்புதல்வர் கணேசனுக்குக் கிடைத்தார். அவர் தாம், சென்னை மர்ரே கம்பெனி அதிபர், திரு. S, ராஜம் என்ற பெரியார். கணேசன், வையாபுரிப் பிள்ளை, பி, ஸ்ரீ; போன்ற தமிழன்பர்களை அவர் திரட்டி ஒரு குழு அமைத்துக் கம்பராமா யணத்தின் பல பிரதிகளை ஒப்பு நோக்கி, ஆய்ந்து, இடைச்

செருகல்களைக் களைந்து. ஆறு காண்டங்களையும் ஒன்பது புத்தகங்களாகப் புத்தகம் ஒன்று ஒரு ரூபாய் என்ற மலிவு விலையில் சில ஆயிரம் பிரதிகள் வெளியிட்டார். அப்பணியில், கணேசன் அடியேனையும் ஈடுபடுத்திக் கொண்டார். உயுத்தக்காண்டத்தின் கடைசிப் புத்தக வெளியீட்டு விழாவில "இடைச் செருகல்கள்" எனுந்தலைப்பில் என்னைப் பேசப் பணித்தார். விழா முடிந்த பின், கணேசன் என்னிடம், "பக்ஷீ! முன்னொரு நாள் உன்னிடம் வெறி கொண்டு பேசியதை நீ மறந்திருக்க மாட்டாய், என் சபதத்தை நிறைவேற்றும் வகையில், என் தமிழ்த்தாய் ஒரு வள்ளலைத் தந்தாள். கம்பன் கவிதை இப்போது பல்லாயிரம் தமிழர்கள் கைகளிலே தவழ்கிறது. அங்கங்கே கம்பராமாயணச் சொற்பொழிவுகள் பரவலாக நிகழ்கின்றன. என் திட்டத்தின் வெற்றிப் பாதையில் இது இரண்டாவது படி. என் பரம்பொருளான இராமன் என் சபதத்தை நிறைவேற்றி வைப்பான் என்பதில் எனக்கு ஐயமில்லை" என்றார். நான் மெல்லக் கேட்டேன். "உன் பரம் பொருள் இராமனா?" என்று.

கணேசன் கூறினார்:— "ஆமாம் பக்ஷீ, உனக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் உண்மை. என்னைக் கம்பனிலும், அவனது இராமாயணத்திலும் ஈடுபடுத்தியது யார் தெரியுமா? உங்கள் நெல்லைத் தமிழ்ப் புலவர், மூதறிவர், திரு. பி. ஸ்ரீ. தாம். நான் செய்த புண்ணியம் உங்கள் பி ஸ்ரீ எங்கள் ஊரிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த குமரன் பத்திரிகைக்கு ஆசிரியராக வந்து சேர்ந்தார். அவர்களோடு தொடர்பு ஏற்பட்டது. என் தமிழார்வம் அவரது கூரிய மதிக்குத் தென்பட்டிருக்க வேண்டும். சில நாட்களிலேயே என்னிடம் பரிவு காட்டத் தொடங்கி விட்டார். மெல்ல மெல்ல அவரது மாணாக்கன் ஆனேன்."

"அவர் இராமாயணக் கட்டுரையைக் கூற, நான் எழுதுவது என்று ஏற்பட்டது. அவர் கூறிவரும்போதே, இடையிடையே நிறுத்திவிடுவார். கண்களை மூடிக் கொள்வார். தமக்குள் ஏதோ கூறிக் கொள்வதை அவரது உதட்டசைவுகள் காட்டும். சட்டென்று, "ம். கணேசா, கடைசி வாக்கியத்தைப் படி. சரி, எழுது" என்று கூறத் தொடங்குவார். ஆற்றொழுக்கைப் போன்று வார்த்தைகள் ஒவ்வொன்றாக வெளிவரும். அவற்றை எழுதும்போதே என் மனமும் அதில் பதிந்து அவர் சிந்தனை ஓட்டம் என்னவாக இருந்திருக்கும் என்று என்னை

ஊகிக்கவைக்கும். எழுதி முடிந்தபின், என் ஊகத்தை அவரிடம் கூறி, அது சரிதானு என்று கேட்பேன். அநேகம் சரியாகவே இருக்கும். சரியில்லாதபோது, நான் எந்த இடத்தில் தவறி னேன் என்பதைக் காட்டித் திருத்துவார். இம்முறையில் அவரோடு உரையாடிய நாள்கள் பல. அந்நாட்களில் அவரிட மிருந்து, கம்பனை அணுகும் முறையையும், அம்முறையில் கம்பராமாயணத்தைப் பதம் பதமாகப் படித்துச் சிந்திக்கவும், அதன் பலனுகக் கம்பன் கண்ட பரம்பொருள் இராமன் எனவும்' கம்பன் தெய்வ அருள் பெற்ற ஒரு தெய்வரிஷி எனவும், என் உள்ளத்தே உணர்ந்துகொண்டேன். இந்த எண்ணத்தை மேலும் அரண் செய்தவர், நம் பாரத நாடு செய்த புண்ணியமே உருவெடுத்ததுபோல் அவதரித்த மகா புருடர் (கண்களை மூடி, உள்ளே தேம்பித் துண்டை எடுத்துக் கண்களை ஒற்றிக் கொண்டார்) மகாத்மா காந்தியே'' — என்று, அப்பெயரைக் கைகூப்பிக்கொண்டே கூறினர்.

'நாட்டில் பிறந்து, படாதன பட்டு' — என்று நம்மாழ்வார் கூறியவாறு, இராமபிரானைப்போல் பல இன்னல்களையும் தாங் கிச் சத்திய வழியில் நடந்தவன் என்று நான் கருதும் என் கம்பனும், நம் கண்முன்னுலேயே அவ்வாறு வாழ்ந்து காட்டிய காந்தி மகானும் கண்ட பரம்பொருளே, எனக்கும் பரம்பொருள். அவன்தான் கம்பன் காட்டிய இராமபிரான். பக்ஷி! கம்பன் பாடல்களில், என் ஆன்ம தாரகமாக நான் கொண்ட பாடல்கள் மூன்று. என் பரம்பொருள்,

"மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் முதன்மைத் தாய
காலமும் கணக்கும் நீத்த காரணன் கைவில் ஏந்திச்
சூலமும் திகிரி சங்கும் கரகமும் துறந்து தொன்மை
ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்''

வந்த காரணம்?

"அறம்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந் தமைந்த நீதித்
திறம்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத் தேக ஈண்டுப்
பிறந்தனன் தன்பொற் பாதம் ஏத்துவார் பிறப்ப றுப்பான்"

எனவே, சிற்றறிவினராய நாம் அவனை நோக்கி,

"உன்னை உள்ள படியறியோம் உலகை உள்ளத் திறனுள்ளோம்
பின்னை அறியோம் முன்னறியோம் நடுவும் அறியோம் பிறழாமல்
நின்னை வணங்கி நீவகுத்த நெறியில் நிற்கும் இதுவல்லால்
என்னை அறிவோம் செயற்பால இன்ப துன்பம் இல்லானே."

என்று கம்பன் கூறியபடி வாழ முயல்வதுதானே, நாம் செய்ய வேண்டியது? பிறர், பரம் பொருளை எப்பெயரிட்டு வணங்கினாலும், என் பரம் பொருள் கம்பன் காட்டிய பரம்பொருள்தான்."

எந்த அமயத்தும், கம்பனைக் குறிக்குங்கால், "என் அப்பன் கம்பன்", "எம்பெருமான் கம்பன்" — என்று உள்ளம் நெகிழ்ந்து, சா. கணேசன் கூறிவந்ததை உலகறியும். உள்ளத்தே தாம் நிறுவிய அத்தெய்வம், பல்லோருங் காண, வெளியிலும் நிறுவப்பெறுவது எப்படி என்று அவர் சிந்தித்திருக்க வேண்டும். அவர் எண்ணம் ஈடேற அவரது பரம் பொருள் உதவியது. நாட்டரசன் கோட்டையில் 'கம்பன் மேடு' என்ற இடத்தில், கம்பனது சிலை கண்டெடுக்கப்பட்டபோது, துள்ளியது கணேசன் உள்ளம். அம்மேட்டிலேயே, அத்தெய்வத்துக்கு ஒரு கோவில் எழுப்பப்பெற்று, அவரது தெய்வச்சிலை அதிலே பிரதிஷ்டை செய்யப் பெற்றது. அத்தெய்வத்திற்கு, அவரே ஒரு அஷ்டோத்தரம் இயற்றி அருச்சனை செய்தார். கம்பன் திருவிழாவின் நான்காம் நாள், அத்தெய்வச் சன்னதியிலேயே கொண்டாடப் பெற்றது. அப்பணியில் மன நிறைவு பெறுவது, கணேசனின் உன்னதப் பணியாக, இதுநாள்வரை நடந்து வருகிறது.

S. ராஜம் என்பார், தமிழ்ப் புலவர்களைக் கொண்டு, ஆற்றித்தர முயன்ற "தமிழ்க் கருவூலம்" என்ற பெரிய முயற்சியை அவர் கை விடும்படியாக நேர்ந்தது. அவரது பதிப்புக்களைப் பாராட்டாது, ஆதரவு தராது, அவர் குலத்தைக் காரணமாகக் காட்டி, அவரையே தமிழ் விரோதி என்று கூறிய கூட்டத்தின் மீது, சா. கணேசன் கொண்ட கோபம் சொல்லும் தரமன்று. அவர் என்னிடம், "பக்ஷி! அந்தக் கருவூலப் பணியை, நாம் நம் கம்பன் கழகத்தில் மேற் கொள்வோம்" என்று உறுதியான குரலில் கூறினர். இன்று கணேசன் இல்லை. எப்படியாவது பாடுபட்டுத் தமிழ்ப் பெரியார்கள் அந்தப் பணியை நிறைவேற்றி வைத்தால், அவர் ஆன்மா குளிரும்,

அப்போது. நெல்லையில் நிலையாகக் கம்பன் கழகம் ஒன்றும் நிலைக்கவில்லை அது பற்றி நான் வருந்தினாலும், அப்போதுள்ள சூழ் நிலையில் நானாக முயன்று ஒரு கழகம் தொடங்க மனோதைரியம் இல்லை. 1976 ல், அப்போது சென்னை உயர்மன்ற நீதிபதியாக இருந்த திரு. மு. மு. இஸ்மாயீல் அவர்கள் நெல்லைக்கு அதிகார முறையில் வந்திருந்தவர்கள்— என்னை வரவழைத்து, "ஆதியில், கம்பனை வளர்த்த நெல்லையில், ஒரு கம்பன் கழகம் இல்லாதது, உங்கட்கெல்லாம் வெட்கமாக இல்லையா?" — என்று கேட்டார். சவுக்கடிபோல் என் செவிகளில் விழுந்தது அக்கேள்வி. "எப்படியும் அமைக்க முயல்கின்றேன்" என்று வாக்களித்து விட்டேன். அப்போது பாளையில், வள்ளல் M. S. சுந்தரம் பிள்ளை அவர்களின் ஆதரவில், திருமலாச்சாரியார் என்பவர், கம்பராமாயண உபன்யாசம் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் உபன்யாசம் முடிந்ததும், அவர்கள் இருவரிடமும் திரு. இஸ்மாயீல் என்னிடம் கூறியதைச் சொன்னேன். திருமலாசாரியாரும், "ஆம், கழகம் ஒன்று வேண்டியதுதான்" என்றார். வள்ளல் ஒன்றுமே கூறவில்லை. நான்கே நாட்கள்! அதற்குள் சுந்தரம் பிள்ளை அவர்கள், அப்போது விட்டலாபுரத்திலிருந்த பி. ஸ்ரீ. அவர்களை நேரில் சந்தித்து, அவர்களைத் தலைமைப் புரவலராக இருக்க ஒப்புதல் பெற்று, அதேபோல் தூத்துக்குடி பண்பாளர், திரு. A. P. C. வீரபாகு அவர்களிடமும் புரவலராக ஒப்புதல் வாங்கிச் சவுக்கடி பெற்ற என்னையே கழகத் தலைவனாகப் பணித்து, உறுப்பினர்களையும் கூட்டிக் கழகம் ஒன்றை நிறுவி, அதற்கு அரசு அங்கீகாரமும் பெற்று "நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்" என்ற பெயருடன் கழகம் நிறுவப் பெற்றது. ஆற்றுப் படலம் முதல், திருமுடி சூட்டுப் படலம் முடிய வாரந்தோறும் பாராயணமுறையில் கம்பராமாயணம் உபன்யாசமுகமாகக் கூறப் பெற்றுப் பட்டாபிஷேகமும் நிறைவுற்றது. இப்போதும் கம்பராமாயண உபன்யாசம் பல தமிழாய்வாளர்களைக் கொண்டு ஞாயிற்றுக்கிழமை தோறும் நடத்தப் பெற்று வருகின்றது.

இதற்கிடையில், புரவலர், கம்பராமாயண மேதை பி. ஸ்ரீ. அவர்கள் திருவுள்ளத்திலும், வள்ளல் சுந்தரம்பிள்ளையவர்கள் திருவுள்ளத்திலும், கம்பராமாயணத்துக்கு அரும்பாடுபட்டு, அதனைக் காத்து வளர்த்த திரு. சா. கணேசனைக் கௌரவிக்க

வேண்டுமென்ற நல்லெண்ணம் தோன்றியது. 1978ல் திரு. கணேசனைப் பாளைக்குத் தருவித்து, அவனரக் கம்பனில் முதன்முதல் ஈடுபடுத்திய அவருடைய குருநாதர் பி. ஸ்ரீ. அவர்கள் திருவாயால், அவருக்குக் "கம்பராமாயணக் காவலர்" என்று சிறப்புப் பட்டம் அளிக்கச் செய்து, அன்னார் திருக்கரங்களாலேயே அப்பட்டம் பொறிக்கப்பட்ட தங்கப் பதக்கமும் பொன்னாடையும் அணிவித்து, உரிய முறையில் பாராட்டி, நெல்லை மாவட்டக் கம்பன் கழகம் பெருமிதமடைந்தது.

கம்பராமாயணக் காவலர், இன்று நம்மை மீளாத் துயரத்தில் ஆழ்த்தி மறைந்து விட்டார். ஆனாலும், அவர் அமைத்த காவல் நிலையமும், அதன் கிளைகளும் அக்காவற் பணியை நன்கு ஆற்றி வருகின்றனவா என மேலிருந்து கண்காணித்து வருகின்றார் என்பதை உணர்ந்து செயல்படுவதும், அவர் உள்ளக் குறைகளான தமிழன்னை திருக்கோவில், மணிமண்டபம் இவற்றின் பணியைப் பூர்த்தி செய்வதும், "கம்பன் கருவூலம்" பதிப்பிக்கப் பெற்று வெளிவர ஏற்பாடு செய்வதுமே, தமிழ் நாடு, அவர் ஆற்றிய பணிக்குக் கைம்மாறு செய்வதாகும்.

கம்பராமாயணக் காவலர் கண்ட பரம்பொருளின் திருவருளால், "கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க! கம்பனடிப் பொடி வாழ்க!" என வாழ்த்தி அமைவோமாக.



## மறக்க மாட்டோம்.

(திரு. V. S. வேங்கடாச்சாரி அவர்கள்)

" கம்பன் வாழ்க !
கம்பன் புகழ் வாழ்க !
கன்னித் தமிழ் வாழ்க !
கம்பனடிப் பொடி வாழ்க ! " — என்ற கோஷம்

காதில் ஒலிக்கிறது, ஆமாம். கம்பனோடு உறவாடச் சென்று விட்டார், கம்மனடிப் பொடி என்ற சா. கணேசனும்.

நான் கம்பனைப் பார்த்ததில்லை; காந்தியடிகளைப் பார்த்திருக்கிறேன், காந்தியடிகளைத் தெய்வமாக மதித்து போற்றி வருகிறேன், "தெய்வம் புருஷரூபேண" என்ற சாத்திர மரியதைப்படி, என் வாழ்க்கையை மாற்றியமைத்த அடிகளைத் தெய்வமாகவே கருதுகிறேன்,

கம்பனும் காந்தியும் இணைந்த ஒரு உருவமாகத் திகழ்ந்தவர், காரைக்குடி சா. கணேசனர். நாட்டுக் கோட்டை நகரத்துச் செட்டிமார் பலரை யான் அறிவேன். அவர்கள் குலத் தொழில், வட்டி வாணிகத்தில் சிறப்பாக வாழ்ந்து வருவது தான். சா, கணேசனையும் நான் முதற் சந்திப்பில் அப்படியே கணித்திருந்தேன்,

அக்காலத்தில் காரைக்குடியில், மோகனூர் கோவிந்தராச அய்யங்கார் என்ற பெரியார் கம்பனில் ஆழ்ந்த புலமைகொண்டு விளங்குவதைப் பி. ஸ்ரீ. ஆக்சாரியார் உதவியால் தெரிந்து கொண்டேன். அய்யங்கார் அங்கே "கம்ப நாடர்" என்ற மாத இதழை நடத்தி வந்தார். அதில் அவருடைய ஆழ்ந்த புலமை விளங்கியது. கம்பனை, வால்மீகியோடு ஒப்பு நோக்கி ஆய்ந்து அறிந்திடும் வகையில் அப்பத்திரிகை இருந்தது. சா. கணேசனர் உள்ளத்தில் கம்பன் பக்தி வளர அதுவே முதற் காரணமாயிற்று.

கம்பனுடைய படைப்பாம் இராமாவதாரத்தில் அரசியல் இருக்கிறது; பொருளியல் இருக்கிறது; கலை இயல் இருக்

கிறது; அறிவியல் இருக்கிறது; அருளியல் இருக்கிறது; வாழ்வியல் இருக்கிறது என்றெல்லாம். கற்றுக் கொண்டேன். பி. ஸ்ரீயும், டி. கே. சியும் இவையெல்லாவற்றையும் எடுத்தெடுத்துச் சொல்வது சா. கணேசனரிடம் தான். உடனிருந்த நானும், பூவொடு நாரும் மணம் பெற்றது என்ற வாய்ப்பினைப் பெற்றேன். அதன் காரணமாகக் கணேசனர் எனக்கு அண்ணனாகவே ஆகி விட்டார். 1938 ல் அவர் காரைக்குடியில் நிறுவிய கம்பன் கழகம், வருஷா வருஷம் நடத்தி வரும் கம்பர் திரு நாள் எனக்கு இன்பத் திருநாளாக இருந்து வந்தது.

ராஜாஜி அவர்களின் அன்பிற்குரிய கணேசன் அவர்கள் சுதந்திரப் போராட்ட இயகத்திலும் தீவிரமாகப் பங்கு கொண்டவர்கள். 1926 லேயே அவர்கள் தேச விடுதலை இயக்கத்தில் சேர்ந்தவர்கள்; என்றாலும், காந்தியடிகளின் தலைமையை ஏற்றுத் தனி நபர் சத்தியாக்கிரகத்தில், 1940ல் சிறைக்கு வந்தார்கள். அதிலே ஏற்பட்ட ஒத்த உணர்ச்சி எங்களை நெருக்கமாக்கி வைத்தது. 1942 இயக்கத்தில், அவர் போலீசாரால் தாக்கப்பட்டுச் சட்டை கிழிந்த சம்பவம் நினைவாகச் சட்டையே அணியாத கணேசன் ஆனர்.

அன்னியர் ஆட்சிக் காலத்தில், கம்பராமாயண எதிர்ப்புச் சூழலில் — கம்பன் கழகத்தைக் கட்டிக் காத்ததும், பிற்காலத்தில் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் கம்பன் கழகங்களைத் தோற்றுவித்ததும், அவருடைய இலக்கியச் சிந்தனையும், ஆராய்ச்சித் திறனும், விடுதலைப் போராட்டக் காலத்தில் "சர்வோதய சமாஜம்" நிறுவிப் பொதுமக்களுக்கு நூற்பு வகுப்புகளை நடத்தியதும், சிறைச் சாலையில் கம்பனைத் தாம் கற்றும், அதை மற்றவர்களுக்குக் கற்பித்ததும், கம்பன் விசயத்தில் அவர் கண்ட அறிவு அனுபவத்தில் உறுதியாய் நின்றதும், இன்னும் அவருடைய பல குண நலன்களையும் பன்னி உரைக்குங்கால் பாரதமாகும்.

அவர் காரைக்குடியிலும் நாட்டரசன் கோட்டையிலும் கம்பன் விழாவேள்வியை ஆசாரத்துடனும் பக்தியுடனும் நடத்தி வருவதைக் கண்ட எனக்கு அந்த விழாக்களின் ஒரு வருஷ நிகழ்ச்சி இன்றும் கண்முன் நிற்கிறது. இத்தனை

வருஷங்களாகியும் என்னுல் அந்த விழாவை மறக்க முடியவில்லே. கூடியிருந்தவர்கள் பத்தாயிரம் பேர். 1950ல் நடைபெற்ற காரைக்குடி கம்பன் விழா அது.

விழாவில் வழக்கம் போல் "கம்பன் புகழ் வாழ்க" என்று கோஷம் எழுப்பினுர் சா. கணேசன். "வாழ்க! வாழ்க!" என்று அவையோர் கூறியதோடு "கணேசனும் வாழ்க! வாழ்க!" என்றும் கூறினுர்கள். அந்த அருமைப் பாட்டை, இன்று நினைத்தாலும் நெஞ்சுருகிக் கண்கள் அம்பு (நீர்) ஒழுக நிற்கிறேன்.

அந்த வருடம் விழாவுக்குத் தலைமை தாங்க இராஜாஜி சென்னையிலிருந்து வந்திருந்தார். அவருடன் கல்கியும், டி. கே. சி. யும் இணைந்து வந்தனர். மூவரும் சேர்ந்து வரும் போது, கம்பன் விழாச் சிறப்புக்குக் கேட்கவா வேண்டும்? அடியேனும் போய்ச் சேர்ந்தேன். என்னைக் கண்டதும், "தம்பி, வந்து விட்டாயா? சந்தோஷம்! கோட்டையூர் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய் இராஜியை அழைத்துக் கொண்டு வர வேண்டும் புறப்படலாமா?" என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டு விட்டார், செயலர் சா. கணேசன் அவர்கள்.

ரயில் நின்றதும், அகமும் முகமும் மலர, மாலை அணிவித்து அவர்களை அழைத்துச் சென்று, அமராவதிப் புதூர் மகளிர் இல்லத்தில், பிரதம விருந்தினர்களாகத் தங்கவைத்தார்கள். வருடா வருடம், விழா மீனுட்சி பெண்கள் பாடசாலேக்குள் நடைபெறுவது வழக்கம். ராஜாஜி வருவதனுல், இவ் வருடம், பள்ளிக்கூடத்தை யொட்டிய மைதானத்தில் பந்தல் போட்டுப் பதினுயிரம் பேர் தங்க ஏற்பாடு செய்திருந்தார், காரியதரிசி கணேசன்.

ராஜாஜி கவர்னர் ஜெனரல் பதவியை விட்டுச் சென்னை வந்து சேர்ந்ததும், முதல் விழாவாக இவ்விழா அமைந்தது. தமிழன்பர்கள், ராஜாஜி பக்தர்கள், கம்பதாசர்கள் என்று எல்லோரும் கூட, வாய்ப்புளித்தார், 'கம்பன் கணேசன்' சா. கணேசன் என்ருல் ராஜாஜிக்குத் தனிப் பிரியம், பரிவு, நம்பிக்கை எல்லாம் நிறைந்திருக்கும்.

ஒரு தடவை, 1945—46ல் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தேர்தல் நடைபெறக் கூட்டம் கூடியிருந்தது. முதல் நாள் இரவு வரை, யார் யாரையோ தலைவராக நிறுத்து வது என்ற பேச்சாயிருந்தது. தேர்தலன்று காலையில் கூடி யதும், "நமது வேட்பாளர் சா. கணேசன்" என்று ராஜாஜி அறிவித்து விட்டார். மறு பேச்சு இல்லை. கணேசன் தேர்தல் களத்தில் நீச்சலடிக்கப் புறப்பட்டு விட்டார். "கம்பர் நிற்கிறார்! கம்பர் நிற்கிறார்!" என்று ஒரே கோஷம். கம்பருக்கும் கணேச னுக்கும் வேற்றுமை தெரியாதவாறு, அப்படி தம்மை அமைத் துக் கொண்டவர் — சா. கணேசன். எப்படி இப்படியாக்கிக் கொண்டார்?

1939ல், தேரழுந்தூரில் கம்பர் விழா நடைபெற்றது. கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களும், டி. கே. சி. அவர்களும் விடுத்த அழைப்பின் பேரில், கம்பனிடம் பக்தி கொண்ட பலர், தமிழ் நாட்டின் பல இடங்களிலிருந்தும் வந்து குழுமியிருந்தார் கள். அவர்களில் காரைக்குடி அன்பர்களும் உண்டு. அமரப் புகழுடன், கம்பர் சமாதி கொண்டுள்ள தலத்திலிருந்து வந்த வர்கள் என்பதனால், காரைக்குடிக்காரர்களை, அவர்கள் ஊரி லும் விழா நடத்த வேண்டுமென்று டி. கே. சி. யும், கல்கியும் கேட்டுக் கொண்டார்கள். அவர்களும் உற்சாகத்துடன் ஏற்றுக் கொண்டார்கள். அவர்களில் ஒருவர் சா. கணேசன்.

அடுத்த மாதம், காரைக்குடியில் கம்பர் விழா நடை பெற்றது. டி. கே. சி. தலைமை வகித்தார்கள். சொ. முருகப்பா அவர்களும், அ. லெ. நடராஜன் அவர்களும் - சா. கணேசன் துணைகொண்டு, முன் நின்று நடத்தினார்கள். துணையாக நின்ற சா. கணேசன் அவர்களே, பின்னர் தாம் முன் நின்று வருஷா வருஷம் சீரும் சிறப்புமாகக் கம்பர் விழாவை நடத்தி வரலானார். அப்படி நடைபெறும் விழாவுக்கு, 1950ல் ராஜாஜி தலைமை ஏற்று நடத்தி வைக்க வந்திருந்தார்கள்.

"கவிச்சக்கரவர்த்தி கம்பன் விழாவுக்குப் புவிச்சக்கர வர்த்தி ராஜாஜி தலைமை தாங்குவது சிறப்பு அம்சமல்லவா? இவ்விழாவில் கம்பராமாயணப் பதிப்பு வேலை ஆரம்பமாவது மற்றொரு சிறப்பு அம்சம் ஆகும்" — என்று வரவேற்புரையில் சொன்னார் கம்பரடிப்பொடி. அதோடு வந்தவர்களை விசாரிப்

பது, நிகழ்ச்சிகளைக் கருர் கண்டிப்புடன் நடத்துவது, பந்தி பரிமாறுவது என்று, சுற்றிச் சுழன்று வந்து, உணர்ச்சிப் பிழம்பாய் நின்ருர் கணேசன்; என்றும் நிற்பார்.

கணேசனைப் பற்றி வாயாரப் புகழ்ந்த ராஜாஜி, "ராமாயணப் பாத்திரங்கள் அற்புதப் படைப்புகள். கணேசன் மாதிரியும் ராமகாவியத்தில் கம்பன் படைத்திருக்கிருன். ராமனுக்கு ஒரு ஹனுமான். கம்பனுக்கு ஒரு சா. கணேசன்" என்ருர். சுக்ரீவனுக்காகட்டும், விபீஷணனுக்காகட்டும் - அவர்களுடைய ராமபக்திக்குக் காரணம் கற்பிக்கப் பலர் வருவர். ஹனுமானுடைய ராமபக்திக்கு எந்தக் காரணமும் கற்பிக்க முடியாதல்லவா? ஹனுமானின் ராமபக்தி அப்பழுக்கற்ற தூய்மையையுடையது. கம்பனடிப்பொடி, கம்பன் மீது கொண்ட பக்தி அத்தகையது.

நாற்பத்து நான்கு வருஷங்கள், கணேசனுடன் உறவாடியவன் நான். உணர்ச்சிதான் நட்பாங்கிழமை தரும் என்றபடி நாங்களிருவரும் அண்ணன் தம்பிகள் ஆனேம். சகோதர தர்மத்தை இராமன் கூறுமொழியாகக் கம்பர் கூறுகிருர். "என் குடும்பம் இப்போது பெருகிவிட்டது. முன்பு நாங்கள் நால்வராகப் பிறந்தோம். இப்பொழுதோ முடிவில்லாத அன்பால் இணைக்கப் பெற்று ஐவராகிவிட்டோம்.

" முன்புளெம் ஒருநால்வேம் முடிவுள தெனஉன்ன
அன்புள இனிநாமோர் ஐவர்கள் உளர்ஆனேம் "

இராமன் குகனுக்களித்த இந்தப் பரிசு எமக்கும் ஒக்கும். அரசியல், தமிழிசை, பாரதி நினைவு — இப்படி எல்லாவற்றிலும் சேர்ந்தே பணி செய்தோம். யாவற்றினும் மேலோங்கி நிற்பது சா. கணேசனுடைய கம்பன் கழகப் பணிதான்.

ஊர்தோறும் கம்பன் கழகம் நிறுவினர். காரைக்குடியில் ஆரம்பித்த விழா, தமிழ் கூறு நல்லுலகமெங்கும் நடைபெறச் செய்தார். இதுவே அவருக்கு நினைவாலயமாகத் திகழுகிறது. போதாக் குறைக்குக் காரைக்குடி கம்பன் மணிமண்டபமும் உளது. மறக்க முடியுமா கம்பனடிப் பொடியை? வாழ்க அவர் புகழ்!



# கம்பனைக் காட்டியவர்.

(தீந்தமிழேந்தல், கவிஞர், புலவர் தமிழ்வேள். புதுவை)

உலக வரலாற்றில சிறப்பிடம் பெற்று விளங்கும் பெரு மக்களின் வாழ்க்கையினை ஆழ்ந்து நோக்கின், ஓருண்மை புலனாகும். அவர்கள் ஒவ்வொருவரும் ஓர் அரிய செயலைச் செய்து முடிப்பதற்கென்று இறைவனால் இங்கே தோற்று விக்கப்பட்டவர்கள் என்பதே அப்பேருண்மை. வான்மீகி, வியாசர், புத்தர், மகாவீரர், சங்கரர், இராமானுஜர், இராம கிருஷ்ணர், இராமலிங்கர் முதலியோர் உலகை உய்விக்கத் தோன்றியவர்கள்.

பாரதப் பெரு நாட்டிற்கு விடுதலை பெற்றுத்தர வந்தவர் அண்ணல் காந்தியடிகள். மறைந்த பழந்தமிழ் நூல்களைத் தேடிக் கண்டுபிடித்துப் பதிப்பிக்கப் பிறந்தவர் டாக்டர் உ. வே. சாமிநாதய்யர். தமிழிலக்கிய வரலாற்றில் ஒரு திருப்பத்தைத் தோற்றுவித்து, மக்கள் வாழ்க்கையை விட்டு விலகிச் சென்ற இலக்கியப் போக்கில், மறுமலர்ச்சியை உண்டாக்க வந்தவர் கவியரசர் பாரதியார். நீண்ட நெடுங்காலமாகப் புலவர் களிடையே வாழ்ந்துவந்த கம்பராமாயணத்தைப் பொதுமக் களிடையேயும் பரப்பத்தோன்றியவர், நம் கம்பனடிப்பொடிகள்.

கம்பனை அவா கவிச்சக்கரவர்த்தியாக மட்டும் காண வில்லை. தாயாகத், தந்தையாக, ஆசானாக, ஞானகுருவாக, நற்பெருந் தெய்வமாகக் கண்டார். கம்பராமாயணத்தைப் படிப்பதிலும், பேசுவதிலும், கேட்பதிலும் அவர் பெற்ற இன்பம் மிகப் பெரிது. தமக்கு ஞானப்பால் வழங்கிய மாதொரு பாகனைத் தந்தைக்குச் சுட்டிக் காட்டிய, ஞானசம்பந்தரைப் போல் — தமக்கு ஞானத்தேன் வழங்கிய கம்பராமாயணப் பூம்பொழிலை, யாவருக்கும் காட்ட விரும்பினார் கம்பனடிப் பொடியார். அதன் விளைவே கம்பன் கழகம் எனலாம். பல்கலைக் குரிசிலாகிய அவரை, நான் கண்களால் காண

நோற்றிலேன்; எனினும், கருத்தினுல் நோக்கியவன். அவரோடு பலமுறை உரையாடியிருக்கிறேன். கடிதத்தொடர்பு கொண்டதுமுண்டு. "கம்பன் புகழ்" என்னும் என் நூலொன்று அவரது அணிந்துரையுடன் வெளிவரும் பாக்கியத்தைப் பெற்றது. அவர் தலைமையிலும் பேசியிருக்கிறேன். இவையே, இக்கட்டுரை தோன்றக் காரணமாயின.

சென்ற இருபத்தோராண்டுகளாகப் பார்வையிழந்த நிலையில் நான் வாழ்ந்து வருகிறேன். எனினும், தமிழறிந்த காரணத்தால், எனக்கும் இலக்கிய மேடைகளில் அடிக்கடி இடங்கிடைத்து வருகிறது. பதினன்கு ஆண்டுகளுக்கு முன், புதுவையில் தோன்றிய கம்பன் கழகம் என்னை ஒரு கவிஞனுகக் கம்பன் அன்பர்களுக்கு அறிமுகப்படுத்தியது. அக்கழகத்தின் முதல் விழாவில்தான், கம்பனடிப்பொடி அவர்களை நான் முதன் முதலிற் காணுமற் கண்டேன்; அவர் பேச்சைக் காதாரக் கேட்டேன். பொருள் பொதிந்த அப்பேச்சில் ஆழமிருந்தது, அழுத்தமிருந்தது, தெளிவுமிருந்தது. அது அவர் உதட்டிலிருந்து வரவில்லை; உள்ளத்திலிருந்து வந்தது. ஆதாயங்கருதி வந்ததன்று; "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் பெருநோக்குடன் வந்தது. புதுவைத் தமிழன்பர்களின் உள்ளங்களை அப்பேச்சு கொள்ளை கொண்டது. அவர்களைக் கம்பராமாயணக் காதலர்களாக மாற்றியது. அப்பெருங் காப்பியத்தில் எனக்கிருந்த காதலை மிகுவித்தது. அப்பேச்சில் வெற்றுரையோ, வேண்டா நகைச்சுவையோ இடம் பெறவில்லை — என்பது குறிப்பிடத்தக்கது.

"அணுவும் பிளக்கக் கூடியதே என்பதை விஞ்ஞானிகள், ஏறத்தாழ ஐம்பதாண்டுகளுக்கு முன்புதான் கண்டனர். நம் கம்பனே ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பே, அக்கருத்தினைத் தன பாடலில் குறித்துள்ளான்" — என்று கம்பனடிப் பொடியவர்கள், பெருமிதத்துடன் கூறி,

"சாணினும் உளன்ஓர் தன்மை அணுவினைச் சதகூ றிட்ட
கோணினும் உளன்மா மேருக் குன்றிலும் உளன்இந் நின்ற
தூணினும் உளன்நீ சொன்ன சொல்லினும் உளன்இத் தன்மை
காணுதி விரைவின் என்றான் நன்றெனக் கனகன் நக்கான்."

எனும் பாடலை, அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்து விளக்கிய போது, மக்கள் பெருவியப்பில் ஆழ்ந்தனர்.

எந்த நிகழ்ச்சியும் குறித்த நேரத்தில் நிகழ வேண்டுமென்று விரும்புபவர், கம்பனடிப் பொடியவர்கள். அவ்வாறே, கம்பன் விழாக்களையும் நடத்திக் காட்டியவர். 1966ல், புதுவையில் நிகழ்ந்த முதற் கம்பன் விழா, குறித்த நேரத்தில் தொடங்கவில்லை. சுமார் இரண்டு மணி நேரம் தாமதமாயிற்று. அவ்விழாவில் பேசிய கம்பனடிப் பொடியவர்கள், "இன்று நேர்ந்த காலதாமதத்தை நாம் பொருட்படுத்துவதற்கில்லை" என்றார். அதற்குக் காரணமில்லாமலில்லை. அன்று சனிக்கிழமை. மாலை ஐந்தரை மணிக்கு, விழா தொடங்கவேண்டும். அதற்கு முன், விழாவிற் பங்கு கொள்ள வந்திருந்த தமிழறிஞர்களின் ஊர்வலம் நிகழவிருந்தது. குறித்த நேரத்தில் அவர்கள் வந்திருந்தும், ஊர்வலம் புறப்படவில்லை. அதற்குக் காரணம், அவ்வூர்வலத்தில், யானையும் இடம்பெற வேண்டும் என்னும் திட்டம், அன்று காலையில் திடீரென்று முடிவு செய்யப்பட்டது தான். அந்நாளில், புதுவையடுத்த கடலூரில் சர்க்கஸ் நடந்து கொண்டிருந்தது. அங்கிருந்து யானையை அழைத்து வர ஏற்பாடு செய்யப்பட்டது. அது, புதுவைக்கு வர, ஒரு மணி நேரம் தாமதமாயிற்று. வந்த யானை மேல் கம்பராமாயண ஏட்டை வைக்கலாமென்றனர் சிலர். அப்போது, புதுவைக் கம்பன் கழக முதற்றலைவராகவும், புதுவை மாநில முதலமைச்சராகவுமிருந்த வை. வெங்கடசுப்பா ரெட்டியாரவர்கள், "வெறும் யானை மேல் வைக்கக் கூடாது; அதன் மேல் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட தவிசிட்டு, அத்தவிசின் மேல் ஏட்டை வைக்க வேண்டும்" — என்றார். அதன்படி, தவிசு அமைக்க ஒரு மணி நேரமாயிற்று. மேளம், நாதசுரம் முதலிய பல்வேறு இசைக் கருவிகள் முழங்கக் கொடி, தோரணம் முதலியவற்றோடு, அலங்கரிக்கப்பட்ட யானை கம்பராமாயண ஏட்டைச் சுமந்த வண்ணம் முன்னே செல்லப், பேராசிரியர் அ. சீனிவாச ராகவன், கம்பனடிப்பொடி, நீதிபதி மகாராஜன், ம. பொ. சி. முதலிய பேரறிஞர்களும், தமிழன்பர்களும், ஆயிரக் கணக்கான பொது மக்களும் ஊர்வலமாகப் புதுவைப் பெருந் தெருக்களில், ஊர்வலமாகச் சென்றபோது, மக்களின் மகிழ்ச்சி வெள்ளம் கரைபுரண்டோடியது. கம்பனடிப் பொடியார், "தன் மகனைச் சான்றோன் எனக் கேட்ட தாய்" போலானார். எதிர்பாராத முறையில்,

விழாவின் தொடக்கம் மிகச் சிறப்பாய் அமையக் காரணமா யிருந்ததாலேயே, அன்றைய காலதாமதத்தை அவர் பொருட் படுத்தவில்லை என்பது தெளிவு. குட முழுக்கு விழாக்களைக் கண்டு மகிழும் பக்தர்களைப் போல், கம்பன் விழாக்களைக் கண்டுகளித்தவர், கம்பனடிப்பொடியவர்கள் என்றால் மிகை யாகாது.

புதுவையின் முதற் கம்பன் விழாவில் தான், கம்பனடிப் பொடியவர்கள் என்னை முதலில் சந்தித்தார். கவியரங்கில், கம்பனின் அவலச்சுவை குறித்து நான் வழங்கிய கவிதைகளை யும் கேட்டார். நிகழ்ச்சி முடிந்து, நான் அவரை நெருங்கி வணங்கிய பொழுது, கும்பிட்ட என் இரு கைகளோடு, தம் முடைய இரு கரங்களையும் பொருத்தித், தம் வணக்கத்தையும் மகிழ்ச்சியையும் தெரிவித்து வாழ்த்தினர். காரைக்குடிக்கு "மங்களமாக வாங்க" என்று அன்போடும் அழைத்தார்.

காரைக்குடியில், 1979ல் நிகழ்ந்த கம்பன் விழாவில் கலந்து கொள்ளும் பேறு எனக்கு, முதன் முதலாகக் கிட்டியது. விழாவின் முதல் நாளன்று, பகலுணவு முடிந்தபின், கம்பனடிப் பொடியார் இருக்குமிடம் சென்றேன். அன்பர் பலர் சூழ, அவர் பேசிக்கொண்டிருந்தார். அவர்கள் வினவிய பல்வேறு வினக்களுக்கும் அருமையாக, அதே நேரத்தில் ஆணித்தரமாக அவர் விடை கூறினர். இலக்கியம், இலக்கணம், வரலாறு, கல்வெட்டு, கலை முதலிய துறைகளில், அவருக்கிருந்த பரந்த அறிவை அப்போது என்னல் புரிந்து கொள்ள முடிந்தது. பிறர் என்ன நினைப்பார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படா மல், தம் முடிவைத் தெளிவாக எடுத்துரைத்தார். அவர், எந்தப் புலவரையும் தாழ்த்திக் கூறவில்லை. கம்பன் ஒருவனையே தெய்வமாகக் கருதிய அவர், பிற புலவர் பெருமக்களையும் வணக் கத்திற்குரிய சான்றோர்களாகவே கருதினர். தமிழில் அவருக் கிருந்த பற்றினல், பிறமொழிகளைக் குறைத்துக் கூறவுமில்லை. பண்பாட்டின் சிகரமாக, நயத்தக்க நாகரிகத்திற்கோர் எடுத்துக் காட்டாகக் கம்பனடிப்பொடியார் விளங்கினர்.

பொதுப் பணிகளில், அவர் முழுமனதோடு ஈடுபட்டார். 1968 ல் சென்னையில் நிகழ்ந்த உலகத் தமிழ் மாநாட்டில், அவர், கலைக் காட்சிக் குழுவின் தலைவராக, அறிஞர் அண்ணு அவர்களால் நியமிக்கப்பட்டார். அப்பொறுப்பினை ஏற்றமை

குறித்து அவர், "ஆண்டவன் அருளையும், அரசின் துணையையும், அன்பர்களின் உதவியையும் நம்பி, இப்பணி தலைமேற்கொண்டேன்" என்றார். கம்பனடிப் பொடியவர்களின் தெய்வ நம்பிக்கையையும் தன்னடக்கத்தையும் இந்த உரை மிகத் தெளிவாகக் காட்டுகின்றதன்றோ?

சென்ற ஆண்டின் தொடக்கத்தில், நான் அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன், "காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதிக்கு உரை எழுதிக் கொண்டிருக்கின்றேன். சிவனைப் பற்றிய அந்நூலில் "சிவன்" என்ற சொல்லே இடம்பெறவில்லை. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு வரை வெளிவந்த எந்தத் தமிழ் நூலிலும் அச்சொல் காணப்படவில்லை. அதற்குரிய காரணம் எதுவாயிருக்கலாம்? மேலும், காரைக்காலம்மையாரின் இயற்பெயர் "புனிதவதி" என்று பெரிய புராணம் மட்டுமே கூறுகின்றது. அதற்கு முந்திய நூல்களில் அப்பெயர் கூறப்படவில்லை. கல்வெட்டுகளில் அப்பெயர் உள்ளதா? முற்காலத்தில் பேய், பூதம், ஆந்தை முதலிய பெயர்களையுடையோர் இருந்ததாகத் தெரிகின்றது. தம்மைக் "காரைக்கால் பேய்" என அம்மையாரே குறிப்பிட்டிருப்பதால், அவரது இயற்பெயர் 'பேய்' என்றே இருந்திருக்குமோ? பெரியோர் கூற்றுகளை இவ்வாறு ஆராய முற்பட்ட என் தீவினை குறித்து வருந்துகின்றேன்" — என்று அக்கடிதத்தில் குறித்திருந்தேன். கம்பனடிப்பொடியார் அதற்கு எழுதிய விடை, அவருடைய ஆராய்ச்சியறிவைத் தெற்றெனப் புலப்படுத்தியது.

என் பணியைப் பாராட்டி, வாழ்த்தி அவர் எழுதிய அக்கடிதப்பொருள் வருமாறு:— "எளியேன் கூறும் விளக்கம் உங்கள் ஐயத்தைத் தீர்த்து வைக்கலாம். சங்க காலத்திலும், சங்கம் மருவிய காலத்திலும் "சிவன்" என்ற சொல் நூல் வழக்கில் இருந்ததாகத் தெரியவில்லை. 'ஆலமர் செல்வன்', 'முக்கட் செல்வன்' 'நீலமேனி வாலிழை பாகத் தொருவன்' போன்றவற்றையே கையாண்டுள்ளனர். சிவன் என்ற சொல் சமஸ்கிருதச் சொல்லாக இருப்பதால், அவர்கள் அச்சொல்லைப் பயன்படுத்தாதிருந்திருக்கலாம். மணிமேகலை காலம் வரை, சிவன் என்ற சொல் பயிலப் பெறவில்லை. மணிமேகலையில் ஓரிடத்தில் 'சைவவாதி' என்ற சொல் காணப்படுகிறது. அம்மையார் நாயன்மார்களில் மூத்தவர். அவரும், சங்கச்

சான்றோர் போன்று, அச்சொல்லைப் பயிலாதிருக்கலாம். ஆயினும், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தின் பதினோராவது பாடலின் ஈற்றடியில் ஐந்தாம் சீர் 'சிவகதி' என்றுள்ளது."

"அம்மையாருக்குப் பெற்றோரிட்ட பெயர் 'புனிதவதி' என்பதாகவே, அறிஞருலகம் நம்புகிறது. ஆனால், பரமதத்தன் அம்மையாரின் தெய்வீக நலத்தை உணர்ந்து, உடன் வாழ அஞ்சி, வெளியேறிய பின்னர், தமது ஊனுடலை விட்டுப் பேயுருவம் பெற்றார். பாடல்களெல்லாம் இதன்பின் பாடியவை. ஆதலால் தம்மைப்பேய் என்றே கூறிக் கொண்டார். காரணம், சிவபிரான் 'பேயோடாடி' அல்லவா? எனவே, பேயுருவந்தான் மற்றோர் கண்ணுக்கு உவப்பளியாதென்றும், பேயுருவம் பெற்றால், சிவன் தம்மையும ஆட்கொண்டு விடுவான் என்றும் கருதியிருக்கலாம். ஆகவேதான், "பேயாருக்கும் அடியேன்" என்று, சுந்தரர், திருத்தொண்டத் தொகை, நான்காம் பாசுரத்தில் அருளினார் போலும், பேய், பூதம் என்றெல்லாம் முன்னாளில், மக்கட்குப் பெயர் வைத்தார்கள் என, என்னால் நம்ப முடியவில்லை. பேயாழ்வார், பூதத்தாழ்வார் என்பனவெல்லாம், காரணப் பெயராகவே இருக்க வேண்டும் — குதம்பைச் சித்தர். பாம்பாட்டிச் சித்தர் என்பவற்றைப் போல். யானறிந்தவரை, கல்வெட்டுக்களில் 'புனிதவதி' என்ற பெயர் காணப்பெறவில்லை. புனிதவதி ஊனுடல் அற்றபின் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே வரலாற்றில் இடம் பெறுவதால், புனிதவதி என்னும் பெயர் காணாமை இயல்பே. எனவேதான் பிற்காலச் சான்றோரும், 'காரைக்காலம்மை, அம்மை, பேய்' என்றே கூறினர். தாங்கள் இப்படியெல்லாம் எண்ண நேர்ந்தமை சிறிதும் தவறில்லை. ஆராய்ச்சியுலகில் பல ஐயங்கள் ஏற்படுவதும், ஐயம் தீருதலும் இயற்கையே. அதற்காக வருந்தல் வேண்டா. பேயனார், பேயார், பேய் மகள் இளவெயினி என்ற பெயர்கட்குக் காரணம் புலப்பட்வில்லை. என்னைப் பணிகொண்ட உங்கள் அன்பிற்கு நன்றி."

விடுதலைப் போராட்ட வீராகிய கம்பனடிப் பொடியவர்கள், எவரிடத்தும் தமது கொள்கையைத் திணிக்க முயல்வதில்லை. ஒருமுறை புதுவைக் கம்பன் விழாவிற்கு அவர் வந்திருந்த போது, ஒருவர் அவரிடம் வந்து, வேறொருவரிடம் தமக்கு ஆதரவாகப் பேசித் தமக்கொரு காரியத்தை முடித்து வைக்கு

மாறு கேட்டுக்கொண்டார். அடிப்பொடியவர்கள் அதை விரும் பாததால், "எனக்கு எவரும் அடிமை இல்லை. நானும் பிறருக்கு அடிமையாக விரும்பவில்லை" என்று மிகத் தெளிவாகக் கூறி மறுத்து விட்டார்.

திருக்கோவலூரிலுள்ள "பண்பாட்டுக் கழகம்" ஆண்டு தோறும், மே மாதம், முதல் வாரத்தில் கபிலர் விழா நடத்தி வருகின்றது. அங்கே, சென்ற ஆண்டில் அடிப்பொடியவர் களின் தலைமையில் "கபிலக் குறிஞ்சி" எனுந் தலைப்பில், சிறப் புரையாற்றும் பணி எனக்குத் தரப்பட்டிருந்தது. நிகழ்ச்சி தொடங்கு முன், என்னருகே வீற்றிருந்த அடிப்பொடியவர்கள், "நீங்கள் எந்த நூலைப்பற்றிப் பேசப் போகின்றீர்கள்? அதைக் கூறின், நான் அதனைத் தொடாமல் வேறு நூல்களிலுள்ள குறிஞ்சித் திணைப் பாடல்கள் பற்றிப் பேசுவேன். நீங்கள் பேசும் போது சங்கடம் நேராது, கூறியது கூறலும் ஆகாது." என்ருர்கள், "பத்துப்பாட்டிலுள்ள குறிஞ்சிப் பாட்டைக் கொண்டு நான் பேச இருக்கின்றேன்."என நான் கூறினேன். அவர்கள், தமது தலைமையுரையில் கபிலரைப் பற்றியும், ஐங்குறுநூறு, குறுந்தொகை எனும் நூல்களில் காணப்படும் குறிஞ்சித் திணைப் பாடல்கள் சிலவற்றைப் பற்றியும் அருமை யாகப் பேசி விட்டு அமர்ந்தார்கள். அன்று அவரது பெருந் தன்மையை எண்ணியெண்ணி வியந்தேன். "உயர்ந்த பண் பாட்டின் சின்னம், கம்பனடிப்பொடி" என்ருல், அது மிகை யாகாது. வாழ்க அவர் திருநாமம்!



## "கண்ணியத்தின் பெயர் கணேசனார்!"

(புலவர் இராமநாதன் பி. ஏ.)

ஜான்சனின் வாழ்க்கையையும் பெருமையையும் உலகிற்குக் காட்ட ஒரு "பாஸ்வெல்" கிடைத்தார். கம்பன் புகழ் பரப்ப ஒரு கணேசன் தோன்றினர். கம்பன் இயக்கமே "தன் மூச்சு, தன் குறிக்கோள், தன் வாழ்வு, தன் இன்பம்" என அவர் கொண்டார். நாற்பத்தி மூன்று கம்பன் கழகங்கள் இன்று கம்பன் புகழ் பாட — எண்ணற்ற புலவர், கவிஞர் கம்பன் புகழ் பரப்ப — அண்ணல் கணேசனுரே காரணமாவார். அந்த மாலுமியை இழந்து, இன்று கம்பன் கழகமாம் மரக்கலம் தவிக்கிறது. ஆனால், ஆழ்ந்த பக்தி, பற்றற்ற உள்ளம், இலட்சியத்தில் பிடிப்பு — இவை உள்ள அண்ணலின் அருளாசி, இந்த மரக்கலத்திற்குக் கலங்கரை விளக்காய் ஒளி தந்து நிற்கும்.

### காலந்தவருமை.

பல விழாக்கள் நாட்டில் நடக்கும். நடக்கின்றன. அரசியல், சமயம், இலக்கியச் சங்கங்களின் மாநாடுகள் கூட்டலாம். "தலைவர் வருகிறர், வந்து கொண்டிருக்கிருர்!" என்று பல மணி நேரம் தாமதமாகத் தொடங்கும். நிகழ்ச்சி ஆறு மணியளவில் தொடங்கும் என்று போட்டால் மக்களே 6–30க்கு ஆடியசைந்து வருவார்கள். ஆனல் கம்பன் திருநாள் விதிவிலக்கு. ஒரு நிமிடம் கூடத் தாமதமின்றி நிகழ்ச்சிகள் தொடங்கும். ஒருமுறை, தலைமை தாங்கவிருந்த தமிழக முதலமைச்சர் சற்றுத் தாமதித்து வந்தார் என்பதற்காக விழாவைத் தாமதப்படுத்தாமல், தமிழ்க் கடல் ராய. சொ. அவர்களைத் தலைவராக்கி, உரிய நேரத்தில் விழாவைத் தொடங்கிய கண்டிப்பாய தன்மை — கொள்கை வீரர் கணேசருக்கே உரியது.

### கண்ணியம்.

மேடைப் பேச்சில், கவிதைகளில் கண்ணியம் காக்க வேண்டுமென்பதில் உறுதியானவர் நம் கம்பனடிப்பொடி. ஒரு பிரபலமான பேச்சாளர், அறிஞர் — ஒருமுறை, கம்பன்

திருநாள் மேடையில், சீதையின் கற்பைக் குறைத்துப் பேசியமைக்காக, அவர் மேடையை விட்டிறங்கியதும், தாம் மேடையேறி அவரைக் கண்டித்துப் பேசியதோடன்றி, "இனி ஒருபோதும் இவரை இம்மேடையில் ஏறவிட மாட்டேன்" என்று கூறி, அதன்படி நடந்த உறுதி இவருடையது. கம்பனை எரிக்க வேண்டுமென்று பேசியவர்களுங்கூடக் "கம்பன் திருநாளுக்கு நான் வருகிறேன்" என்று ஆள் வைத்துக் கேட்டனுப்பிக் கலந்து கொள்ளும் வண்ணம், சீர்மிகு விழா எடுத்த செம்மலிவர். "கம்பன் விழா மேடையில் பேசத் தனித் தரமும் தகுதியும் தேவை" — என்ற முத்திரையைப் பதித்தவர். சிபாரிசுக்காக எவரையும் அனுமதிக்க மாட்டார். தாம் பார்த்து, "நல்ல தரமான கவிஞர், பேச்சாளர்" என்று உணர்ந்தால் பரிந்துரை இல்லாமலே அழைப்பார்.

## இச்சகம் பேசாதவர்.

தம் கழக நிதிக்காகவோ, தம்மை மதிக்க வேண்டுமென்றோ, யாரையும் இச்சகம் பேசி ஏமாற்றாதவர். "முரட்டுப் பிடிவாதக்காரர், பிழைக்கத் தெரியாதவர்" என்று அவரைப் பேசியவர்கள் கூடப் பின்னர் உண்மையுணர்ந்து "இலட்சிய வாதி, செயல்வீரர்" என்று போற்றினர்கள். தமது நெருங்கிய உறவினர் என்ற போதும், தம் கொள்கைக்கு ஒத்து வராதவர்களைக் கம்பன் மணிமண்டபத்தினுள்ளே நுழையக்கூடவிடாதவர், நேர்மையும், அதன் காரணமாயமைந்த துணிவும் அமரர் கணேசனாரின் தனிச்சிறப்பான பண்புகளாகும்.

## எளிமை.

கம்பனடிப் பொடியாருக்குப் பல லட்சங்கள் பெறுமான சொத்து இல்லை என்றாலும், வசதியாய் வாழப் பொருள் வசதி உண்டு. ஆயினும் அவர் எளிமையாகவே வாழ்ந்தார். இரண்டு மேடை ஏறிப் புகழ் பெற்றதும், தம்மைப் பெரியவராக எண்ணிக் கார் முதலிய வசதிகள் கேட்பவர் பலர் இருக்க, இவரோ, ரயிலில், பஸ்ஸில் எளியவராய் பயணம் செய்து வருவார்; கம்பன் பணிக்காக இரவு கண் விழித்துப் பல மைல் பயணம் செய்வார். தம் பெட்டி, படுக்கை, பூசைப் பெட்டி இவற்றைத் தாமே சுமந்து வருவார். தமக்கென்றோ, தாய்க் கழக நிறுவனர் என்றோ, பெரிய அறிஞரென்றோ என்றும் சிறப்பு

மரியாதை கேட்க மாட்டார்; விரும்பவும் மாட்டார். கம்பன் கழகப் பேச்சாளர் ஒருவர் வீட்டுத் திருமணத்திற்கு எங்களுடன் அவர் வந்த ஒரு சமயம், டவுன் பஸ்ஸில் இடிபட்டு நின்று கொண்டு வந்து, வெயிலில் மூன்று பர்லாங் தூரம் நடந்து வந்த எளிமையையும் அன்பையும் மறக்கவும் முடியுமோ?

## அறிஞர் குழாம்.

'வெட்டிப் பேச்சு' — அறியாதவர், கம்பனடிப் பொடி. சதா காலமும், கம்பனின் தமிழ்க் கடலில் மூழ்கி, முத்தெடுத்துக் கொண்டிருப்பார். கம்பன் விழா, அதற்காய நிகழ்ச்சித் தலைப்புக்கள், சொல்லாராய்ச்சி, கல்வெட்டாராய்ச்சி, சிற்பக் கலை, புதுப்புது நூல்களைத் திறனாய்வு செய்தல் — என்று சிந்தனையை அறிவுலகில் செலுத்திய தூயவரிவர். நாற்பத்தைந்து ஆண்டுகளில், வந்த தலைப்பே வராமல் நிகழ்ச்சி அமைத்து நடத்திய சாதனை இவருடையதே. பட்டிமண்டபம் என்ற பழங்கால விவாத மேடையைப் புதுப்பித்துக் கம்பன் விழாவில் அறிமுகப் படுத்திய மேதை இவர். பல்வேறு அறிஞர் குழாத்தோடும் இவர் கொண்டிருந்த நட்பே, இவரது அறிவுச் சுடருக்கு நெய் வார்த்தது.

பாரதியார், பால் நாடார், டி. கே. சி., நயினுர் முகமது, மூதறிஞர் பி. ஸ்ரீ., சிலம்புச் செல்வர் ம. பொ. சி. எனப் பல அறிஞர்களுடன் பழகிக் கம்பன் காவியக் கனியைச் சாறு பிழிந்து, அருந்தி, அந்த மயக்கத்திலேயே கம்பனுக்கு அடிமையானவர். தமது முப்பதாம் வயதில் (1938ல்) கம்பன் கழகம் நிறுவி, எழுபத்து நான்கு வயது முடியும் வரை, அதைக் கண்ணெனக் காத்துப் புரந்து, கவின்மிகு மணிமண்டபம் சமைத்து, அறநிலையம் நிறுவிக் கம்பன் கற்பகம் கண்டு, கம்பனோடு தம் பெயரையும் இணைத்துக்கொண்டவர் கணேசனுர். வாழ்க அவர் புகழ்! வாழ்க அவர் திருநாமம்!



# மறக்க முடியாத மா மனிதர்.

(சிவானந்த விஜயலக்ஷிமி)

'தோன்றிற் புகழோடு தோன்றுக' என்ற பொய்யா மொழி எல்லோருடைய வாழ்விலும் மெய்யாவதில்லை. அந்தப் பொய்யா மொழியை மெய்யாம் சொல் ஆக்கியவர்—

செஞ்சொற் கவியின்பம் பருகும் வேட்கையால் ஈர்க்கப் பட்டு, கம்பன் என்னும் மாமேதையின் தரிசனத்தை அகக் கண்களால் கண்டு ஆனந்தித்து, அவனது கவி நயம் என்னும் வலையில் சிக்குண்டு, அவன் காப்பியம் என்னும் மா மந்திர உபதேசம் பெற்று, அவனைத் தனது மாபெரும் ஞான குருவா கவே ஏற்று வழிபட்டவர்—

கருத்த மேனியும், கணீரென்ற குரலும், இரும்புக் கம்பி போன்ற உறுதியான உடலும், எதற்கும், யாருக்கும் வளையாத உள்ளத்துடனும் உலவியவர் — காரைக்குடியின் ஒளிவிளக் காகத் திகழ்ந்த உயர்திரு சா. கணேசன் அவர்கள்.

அவர்களுடன் எங்களுக்கு அதிகம் பழக்கம் கிடையாது. அறுபதாம் ஆண்டுகளின் துவக்கத்தில் சில ஆண்டுகள் தவருது காரை நகர்க் கம்பன் விழாவில் கலந்து கொள்ளும் பேறு அவர்கள் அழைப்பால் கிட்டியது. கம்பனின் அறிமுகம் எனக்குக் கிடைத்ததே அவரது தொடர்பால்தான் என்ருலும் அது மிகையாகாது.

அந்த அறிமுகம் இராம காதையைப், பல் வேறு மொழிப் பெரும் புலவர்களின் நூல்களை ஒப்பு நோக்கி, உரையாற்ற இன்று உதவுகிறது!

எட்ட இருந்து ஒரு மலையின் அழகை ரசிப்பது போல, கடலின் ஆரவாரத்தைக் கரையில் நின்ற வண்ணம் அனுப விப்பது போல, அருவியின் வேகத்தை அகன்று நின்றே வியப்பது போலத் திரு. கம்பன் அடிப் பொடி அவர்களின் ஆக்க வேலைகளையும், ஊக்கத் திறத்தையும், ஆற்றலால்

மலர்ந்த அரும் பணிகளையும் எனது அருமைத் தந்தையாரும், என் கணவரும், நானும் மனமாறப் பாராட்டி மகிழ்ந்திருக்கிறோம்.

கம்பன் அடிப்பொடி, கம்பனுக்கு மாத்திரம் அடிமையல்ல; கடவுளுக்கும் அடிமை. கண்ணியத்திற்கு இருப்பிடம். கடமையின் பிறப்பிடம். கட்டுப்பாட்டின் பெட்டகம். அரசியல், ஆத்மீகம், இலக்கியம், இசை, எழுத்து, கவிதை, சிற்பம், தொல்பொருள் ஆராய்ச்சி என்று தொல்லையில் ஒன்றேயாகி துறைதொறும் பரந்த அவரது 'சிந்தனைச் சரயூ' வெள்ளம், பல வடிவில் இந்தத் தமிழ் நாட்டைச் செழிக்கச் செய்திருக்கிறது.

கம்பனுக்கு அவர் படைத்துள்ள மலர் வழிபாட்டுப் போற்றிப் பதிகம் பூரணமான கம்பன் காவியச் சாற்றைப் பிழிந்து நிரம்பிய பொற்கிண்ணம். குலசேகர ஆழ்வாரின் அடிச் சுவட்டைப் பின்பற்றிக் கம்பனுடன் தொடர்பு கொண்ட ஏதேனும் ஒன்றாகப் பிறக்க, ஏங்கும் அந்தப் பாடல்களில்தான் எத்தனை பக்தி. எத்தனை உருக்கம், எத்தனை ஏக்கம், எத்தனை அற்புதமான சொல்லாட்சி!

இதே போன்று பிள்ளையார் பட்டியில் எழுந்தருளியிருக்கும் கற்பக விநாயகப் பெருமாள்பால் கனிந்துருகும் காதலுடன் அவர் அமைத்துள்ள பாடல்கள் மிகச் சிறப்பாக இருக்கின்றன. பாராயணம் செய்து நற்பயன் பெற உதவும் தூய்மையான பக்தி நிரம்பிய பாடல்கள் அவை. உதாரணத்திற்கு இங்கு ஒன்றிரண்டு காட்டலாம்.

காரைக்கால் அம்மையார் பாடியுள்ள 'காலனையும் வென்றோம்' என்ற பாடலை அநேகமாக அப்படியே எடுத்துக் கையாண்டுள்ள ஒரு பாடல் அழகானது. மனதிற்கு மரணத்தை வென்று விடலாம் என்ற எழுச்சியை ஊட்ட வல்லது.

காலனையும் வெல்வோம் கடு நரகுக்கு ஆட்படோம்
மேலை இருவினையும் வேர் அறுப் போம் — ஞாலம் இதில்
தெள்ளு மருதங்குடித் தேசி விநாயகப்
பிள்ளையார் தன்னருளைப் பெற்று.

இந்தப் பாடலைப் பாடும் போது யம பயம் நம்மைக் கண்டு பயப்பட்டு ஓடிவிடும் என்ற உணர்ச்சி தானே நமக்கு உண்டாகிறது! ஒருவேளை தன்னை இறுதியில் சந்தித்த மரணத்தையும் நோக்கி "நமஸ்காரம்" என்று தன் உறுதி தொனிக்கும் குரல் கொடுத்து கைகூப்பி அழைத்து ஏற்றுரோ அவர் என்றே எண்ணுகிறது நம் மனம்.

பகவத் கீதையின் சாரத்தையே ஒரு பாடலில் காட்டுகிருர் – திரு. சா. கணேசன். செய்யும் செயல்களையெல்லாம் இறைவனுக்கு அர்ப்பணித்துப் பற்றின்றி வாழ்பவர் முக்தி பெறுவர் என்பது கண்ணன் உரையின் பரம தாத்பரியம். அதனைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் இப்பாடலில் காட்டுகிருர்.

எவையெல்லாம் செய்தோம் எவைஎல்லாம் செய்வோம்
அவையெல்லாம் நம் செயல்க ளல்ல — சிவைபாலா
அத்துணையும் நின்செயலே அப்பயனும் நிற்கேதான்
முக்திஅருள் வேழ முகா.

இப்படிப் பாடிய நல்ல உயிருக்கு அந்த தேசி விநாயகப் பெருமாள் திண்ணமாகத் தம் திருவடி நிழலில் தங்கும் பேற்றினைத்தான் தந்திருப்பார்.

அவர் நினைவைக் கம்பன் கழகத்தின் ஒவ்வொரு செயலிலும் நிரந்தரமாக்குவோம். அவர் குரல் அங்கு ஒவ்வொரு சொல்லிலும், ஒவ்வொரு கல்லிலும் எதிரொலிக்கட்டும். அவர் நாமம் என்றும் நிலவுலகு வாழ்த்த நிலைத்து நிற்கட்டும்!



## "கம்பனடிப் பொடியார்"

(கவிஞர் மரியதாஸ், திருச்சி - 20)

"நான் இன்னதைச் செய்யாவிட்டால், என் பெயரை மாற்றிக் கொள்கிறேன்" என்று சொன்னவர்களைப் பார்த்திருக்கிறோம். பின்னர், அன்னதைச் செய்யாமலும், அவர் பெயரை மாற்றிக்கொள்ளாமலும் இருந்தவர்களையும் பார்த்திருக்கிறோம். ஆனால், "நான் இன்னதைச் செய்வேன். அதனால் என் பெயரை மாற்றிக் கொள்கிறேன்" என்பது ஒரு புதுமையான சூளுரை. அந்நச் சூளுரையைப் பிறரறிய மேடையில் பேசாமல், பிழையறியாத் தம் நெஞ்சத்தில் சொல்லிக் கொண்டவர், கம்பனடிப் பொடியரார்.

ஒன்றை வாழ வைக்க, மற்றொன்று தன் வாழ்க்கையைக் கொடுத்து விடுவதைத் தியாகம் என்பர். "எனக்கென ஒரு வாழ்க்கை வேண்டாம்; அதை இந்தியாவுக்கே கொடுத்து விட்டேன்" — என்று காந்தியடிகள் எண்ணியிராவிட்டால், இன்று இந்தியா எழுந்து நிற்காது. இந்தியாவுக்கு ஒரு காந்தியடிகள்; கம்பனுக்கு ஒரு கணேசனார். இந்தத் தியாகங்களுக்குப் பென்ஷன்கள் கிடையா.

ஒரு நாட்டுக்காக ஒருவர் தம்மை ஒப்படைப்பது வரலாற்றுக்குப் புதுமையானதன்று. ஒரு கவிஞனுக்காக ஒருவர் தம்மை ஒப்படைத்தது, உலக வரலாற்றில் முதன் முறையாக நிகழ்ந்திருக்கிறது. அந்த ஒப்படைப்பு ஆராய்ச்சிக்காக அன்று, ஆராதனைக்காக. அந்த ஆராதனையே பல ஆராய்ச்சியாளர்களை உற்பத்தி செய்திருக்கிறது.

கம்பன் ஒரு வைணவன்; உவச்சர் குலத்தவன். அவற்றிற்காக அவன் போற்றப்படவில்லை. அவ்விரண்டுக்கும் அப்பாற்பட்டவர் சா. கணேசனார். கம்பன் ஒரு கவிஞன் — கவிச்சக்கரவர்த்தி. அவன் ஒரு சாம்ராஜ்யத்தை உருவாக்கியிருந்தான். அந்த சாம்ராஜ்யம் மனித வர்க்கத்தின் ஒருமைப்பாட்டுக்காகப் படைக்கப்பட்டது. இந்திய ஒருமைப் பாட்டுக்குள் இருந்த வரையில், சா. கணேசனார் ஒரு தேசிய வாதியாக இருந்தார். அது விரிந்து, வளர்ந்து கம்பன் கண்ட ஒருமைப் பாட்டுக்கு வந்த போது, அவர் கம்பனடிப் பொடியானார்.

எங்கோ ஒருவர், ஒரு கழகத்தைத் தொடங்க, அதைப் பார்த்தவர் மற்றொன்றைத் தொடங்க, அதைக் கேள்விப் பட்டவர் இன்னொன்றைத் தொடங்க, அது பின்னொன்றைத் தொடங்க, இன்று நாற்பத்து நான்கு கழகங்கள்! இப்படி எந்த நாட்டில் நிகழ்ந்திருக்கிறது?

ஒரு கட்சியின் கிளைகள்கூட ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டு இயங்குவதில்லை. இந்த நாற்பத்து நான்கு கழகங் களும் ஒரு கூட்டுக் குடும்பம்போல் இயங்குகின்றன. அத்த னைக் கழகங்களும், "எங்கள் தலைவர் கம்பனடிப் பொடியார்" என்று விரும்பிச் சொல்லிக் கொள்கின்றன. எனவே, கிளைக் கழகங்களின் தலைவர்கள் கூடக் கம்பனடிப் பொடிக்குத் துணைத் தலைவர்களாகவும், செயலாளர்களாகவுமே செயல்பட்டார்கள். ஆனால், கம்பனடிப் பொடியாரோ, "கம்பன் கழகச் செயலாளர் களில் யானொருவன்" என்றே தம்மைக் கூறிக் கொண்டார். பணியுமாம் என்றும் பெருமை!

அவரிடமிருந்த இந்தப் பணிவு யாவர் மட்டும் ஒரே விதமாய் இருந்தது. அது கம்பனடிப் பொடிகளின் முத்திரை களில் ஒன்று. அதிகாரங்கள் வந்தாலும், ஆராய்ச்சிச் சிகரங்கள் வந்தாலும், ஆரம்பப் பேச்சாளர்கள் என்றாலும் ஒரே மாதிரி யாக வணங்கி, வரவேற்கும் பக்குவம் அவரிடம் காணப்பட்டது. அதற்குப் பெயர்தான் அறிவின் முதிர்ச்சி. சிலரைக் கண்டால் முதுகு வளைந்து வணங்குவது, சிலரை எதிரோடிச் சென்று வரவேற்பது, சிலர் குனிந்து வணங்கினாலும் நிமிர்ந்து கொண்டே தலையசைப்பது போன்ற வேறுபாடுகள் அவரிடம் இல்லாதவை, அதற்குக் காரணம், அவரது உள்ளம் சமநிலைப் பட்டதேயாகும்.

சமநிலைப்பட்ட உள்ளத்தில்தான் சமயக் காழ்ப்புகள், சாதிபேதங்கள் ஆகிய சலனங்கள் இருப்பதில்லை. அந்தச் சலனங்கள் அவரிடம் இருந்திருக்குமானால், மரியதாஸ் போன்ற பிற சமயத் தமிழர்கள் கம்பன் மணிமண்டபத்தில் பேசியிருக்க முடியாது. கம்பன் கழகங்களுக்கு அவர் வகுத்துக் காட்டி யிருக்கும் பாதை இது.

தெளிந்த புலமை, சிறந்த திறமை — இவைகளே அவர் பேச்சாளர்களைத் தேர்ந்தெடுக்கும் அளவு கோல்கள். மற்றவர்களின் பரிந்துரைகள் அவரிடம் எடுபடுவதில்லை. பிற கவியரங்குகள் மரியதாசுக்காகக் காத்திருந்த காலத்திலுங்கூடக் கம்பன் விழாவில் மட்டும் அவனுக்கு இடமில்லை. சிறு வயலில், கவிஞர் அரு. நாகப்பன் அவர்கள் நடத்திய பாரதி விழாவில் எனது திறமையை நேரில் கண்ட பிறகே, கம்பனடிப் பொடிகள் என்னைக் கம்பன் விழாவில் சேர்த்துக் கொண்டார்.

கம்பன் அருளுங் கனிகளில், சமத்துவக் கனி பற்றி நான், காரைக்குடி கம்பன் விழாவில் பாடி முடித்தவுடன், அந்தக் கவிதைகளை எழுதிய என் கைகளைப் பிடித்து அவர் முத்தம் கொடுத்த காட்சி, இன்னும் கண்ணில் தெரிகிறது. அந்த நிகழ்ச்சி அடிக்கடி என் மனத்தில், "பேறெனக்கு இதன் மேலுண்டோ?", என்ற, சேக்கிழார் பெருமானின் வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே இருக்கிறது. உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன ஆய்வு மாணவர், டாக்டர். ப. மகாலிங்கம் கூறியிருப்பது போல்: "ஆம். கம்பனடிப் பொடிகளைப் பார்த்திருக்கிறோம்; அவர் பேச்சைக் கேட்டிருக்கிறோம்; அவருடன் பழகியிருக்கிறோம்; அவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்திருக்கிறோம்!" என்று கூறிக் கொள்ளும் பெருமையே ஒரு பெரும் பேறு.

நான் இந்தியப் பிரதமர்கள் இந்திராகாந்தி, மொரார்ஜி தேசாய், தமிழக அமைச்சர்கள், தமிழ் மூதறிஞர்கள் பக்கத்திலெல்லாம் உட்கார்ந்திருக்கிறேன், அப்பொழுதெல்லாம் என்னிடம் உண்டாகாத மதிப்பும் மரியாதையும் கம்பனடிப்பொடிகளின் அருகில் அமர்ந்திருக்கும் போது ஏற்படும். அந்த மரியாதை, வெண்ணிற அங்கி அணித்திருக்கும் எங்கள் சமய குருவானவர்களுக்கு அருகில் இருக்கும் போது உண்டாகும் மரியாதையாகும். இரட்சணிய யாத்திரிகமும், விவிலியமும் கம்பனடிப்பொடியின் திருவாய் மொழியாக வருவதைப் பார்த்து மசிழ்ந்திருக்கின்றேன்.

எதையும் ஒழுங்காகச் செய்ய வேண்டும் என்று நினைப்பவர், கம்பனடிப் பொடி. காரணம், அவர் தம்மில் தாமே ஒழுக்க சீலர். அந்த ஒழுக்கமே அவருக்கு விழுப்பம் தந்தது. அந்த

நல்லொழுக்கத்தின் முன் மிகப் பெரிய மேதைகளும் பெட்டிப் பாம்பாக ஆகிவிடுவார்கள். நேரம் தவருமையில், அவரது நெஞ்சு பழகியிருந்தது. காலந் தவருமையைக் கடமையாகக் கருதியவர் அவர். "கம்பன் விழா, தொடங்க இன்னும் ஒன்றரை மணித் துளி இருக்கிறது; இன்னும் ஒரு மணித் துளி இருக்கிறது" என்ற அவரது அறிவிப்பைக் கேட்டுக் கூட வந்தவரையும் விட்டு விட்டு வேர்க்க விறு விறுக்க ஓடி வந்து மேடையில் நின்ற அமைச்சர்களையும், அறிஞர்களையும், பார்த்திருக்கிறேன். "என் கம்பனை விட மற்றவர்கள் பெரியவர்களோ?" என்று கேட்கும் துணிச்சல்காரர் அவர்.

நாம் யாவரும் கம்பன் மீது பற்றுடையவர்களே. அந்தப் பற்று, சில சதவிகிதமே. கம்பனடிப்பொடியின் பற்று நூற்றுக்கு நூறு, கம்பனை வாழ்த்துவதற்கும், புகழ்வதற்கும் கணக்கற்றவர் உளர். கம்பனை வணங்குவதற்கோ, கம்பன்டிப்பொடி மட்டுமே. கம்பனை ஒரு கவிஞனுக வணங்குவதற்குக் கூட நம்மில் சிலர் வரலாம். ஆனுல், கம்பனைத் தெய்வமாக வணங்கக் கம்பனடிப்பொடியே வரவேண்டும். தேசத்தைத் தெய்வமாகக் கருதினன் ஒரு பாரதி. கம்பனைக் கடவுள் போல் கருதினர் கம்பனடிப்பொடி.

கம்பனுக்கு அவர் ஆற்றியிருக்கும் பணிகள் கணக்கில் அடங்காதவை எந்தெந்தக் கோணத்தில் கம்பனைக் காண முடியுமோ, அந்தனைக் கோணங்களிலும் கம்பனைக் காண முயன்றவர் அவர். ஆயினும், ஒரு பெருங்குறை இருந்து கொண்டே வந்தது. அது கம்பனுடைய சந்தங்கள் பற்றியது. தமிழகத்தில் ஒரே நூலில் கிட்டத்தட்ட தொண்ணூற்ருறு (96) சந்தங்களை வைத்துப் பாடியவர் கம்பனுக்கு முன் யாருமிலர். சந்தப் பித்தன் கம்பன் என்ருல் மிகையாகாது. அவனுடைய சந்தங்கள் நிச்சயமாக ஆய்வுக்குரியவை. அந்த ஆய்வு நிகழும் போது, சந்தங்கள் பற்றிய சரித்திரமும், சாதனைகளும் வெளிப்படும். கம்பன் விழாக்களில், அந்த ஒரு பெரும் பிரிவு தனித்த ஆய்வுக்கு வராமலே இருந்தது.

இந்த ஆண்டு எதிர்பாராமல் சென்னைக் கம்பன் கழகத்தார், "கம்பனிடம் கற்றேன்" என்ற தலைப்பில் என்னைச் சந்தங்கள் பற்றிச் சொற்பொழிவுக்கு அழைத்திருந்தார்கள்.

அந்தச் சொற்பொழிவு கம்பனடிப் பொடியின் தலைமையிலேயே அமைந்திருந்தது. உரியவர் தலைமையில் கிடைத்த அந்த அரிய வாய்ப்பு, பெரிய இழப்பாகப் போய் விட்டது. கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை. கம்பனுடைய சந்தங்களுக்காகவே என்னை ஒதுக்கிக் கொள்ள நான் ஆசைப்பட்டதை அவரிடம் காட்ட முடியவில்லை.

கம்பனடிப் பொடிகள் வாழ்ந்திருந்த காலத்தில், அவருக்காக, என்னால் எழுதப்பட்டுக் கம்பன் கவியரங்குகளில், அவரது செவி குளிர நான் பாடி மகிழ்ந்த ஒரு பாடலுடன் நிறைவு செய்கின்றேன்.

அம்புவி மக்களை ஒன்றுப டுத்திட
அன்னொரு நாளினிலே — அவர்
அண்ணனும் தம்பியு மாகஇ ருந்திட
அங்கொரு நூலினிலே — ஒரு
கம்பன்எ னப்படும் மானிடம் வந்தொரு
காவியம் செய்ததுவும் — அது
கன்னியெ னுந்தமிழ் மின்னியெ ழுந்திடும்
ஓவியம் ஆனதுவும் — அதைத்
தும்பியெ னப்பல செம்புல மைத்திரள்
தொட்டும கிழிந்ததுவும் — அதைத்
தொண்டும னத்தொடு மொண்டுகொ டுத்திடத்
தொண்டர்கள் வந்ததுவும் — ஒரு
கம்பன டிப்பொடி யாரெனும் பேருறு
காளையின் பணியாகும் — அவன்
காரைக் குடியெனும் ஊரைப் புகழ்வது
காவிய மொழியாகும்.



## கம்பனடிப்பொடி
## ஒரு நடமாடும் பல்கலைக் கழகம்,

---

(திரு. க. கு. கோதண்டராமன், கள்ளிப்பட்டி.)

---

கம்பனடிப்பொடியின் மறைவு. தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு ஈடு செய்ய முடியாத நஷ்டம் என்றால், அது உபசார வார்த்தையல்ல. உண்மையிலேயே தமிழ் மக்களுக்கு அவர் மறைவு பேரிழப்பாகும். ஏன்? எதனால்?

அவர் ஒரு நடமாடும் பல்கலைக் கழகம். அவருடைய கம்பன் பக்தியை — கம்பன் பணியை — கம்பனிடத்து அவர் கொண்டிருந்த எல்லையற்ற ஈடுபாட்டைத் தமிழ் உலகில் எல்லாரும் அறிவர். அவர் ஒரு சுதந்திரப் போராட்டத் தியாகி. 1942 வெள்ளையனே வெளியேறு போராட்டத்தில் கலந்த பெருந் தியாகி என்பதையும், தேவகோட்டை சப்ஜெயிலில் ஏற்பட்ட வழக்கில் சம்பந்தப்பட்ட மாவீரர் என்பதையும் சிலர் நன்கு அறிவர். மேலும் — சிற்பம், ஓவியம், பண்டைத் தமிழெழுத்து வடிவ ஆராய்ச்சி முதலான வரலாற்றுத் துறையில் பெரும் வல்லுனர் என்பதை அத்துறைகளின் வல்லுனர் நன்கறிவர். உலக நடப்புக்களில் மிகச் சாதாரண விஷயங்களிலும், அவர் ஆழ்ந்த அறிவு பெற்று, வியக்கத்தக்க மனிதராய் விளங்கினர் என்பதை அவருடன் நெருங்கிப் பழகிய ஒரு சிலரே அறிவர். ஆம்! அவர் ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்பதைப் பழகிய அந்த ஒரு சிலரேதாம் அறிந்திருந்தனர்.

கொஞ்சம் தெரிந்தாலும் நூருக விளம்பரப் படுத்திப் பெருமை தேடும் இந்தக் காலத்தில் அடிப்பொடி போன்ருரும் இருந்தார்கள் என்பதும் ஒரு அதிசயந்தான். விளம்பரத்தை அடியோடு விரும்பாதவர். தம் அன்பர்கள் அவ்வாறு செய்வதையும் அனுமதிக்காதவர். வளைந்து கொடுக்கும் இயல்போ, ஒருவரைக் கவர இச்சகமாகப் பேசும் இயல்போ இல்லாதவர். அஞ்சா நெஞ்சும், பிறர் தவறைச் சுட்டிக் காட்டும் இயல்பும்

கொண்ட நக்கீரர். ஆகவே, அவர் புகழை உள்ளது உள்ளபடி அறியத் தமிழ் மக்களுக்கு வாய்ப்பில்லாமல் போனது பற்றி ஆச்சரியப்பட வேண்டியதில்லை.

ஒரு சமயம், நானும் அடிப்பொடி அவர்களும் பேரூர் ஆருத்ரா தரிசனத்துக்குப் போயிருந்தோம். விடியற்காலம். ஏகப்பட்ட கூட்டம். தள்ளுண்டு நெருக்குண்டு மிகச் சிரமப் பட்டோம். நான் கஷ்டம் தாங்காமல் அவரை நோக்கி, "அண்ணு, நாம் இன்னுர் என்று தெரியப்படுத்திக் காவலர் உதவியுடன் தரிசனம் செய்யலாமே" என்றேன். "அப்படித் தரிசனம் செய்யக் கூடாது. ஆண்டவன் முன்னிலையில் அனை வரும் சமம். நம் தனித் தன்மையை இறைவன் முன் காட்ட வேண்டாம். இப்படி எல்லோரையும் போல் இடிபட்டுக் கொண்டே தரிசனம் செய்வோம். அதிலொரு மகிழ்ச்சியும் இருக்கிறது" என்று கூறிவிட்டார், அடிப்பொடி. இவ்வாறு கூறும் மனப் பக்குவம் இன்று எத்தனை பேரிடம் காணமுடியும்? இடிபட்டே தரிசனம் செய்தோம்.

கோவையில் எனது வீட்டுக்கருகில் "ஐடியல் ஸ்டோர்ஸ்" என்ற பெரிய கடையொன்றிருந்தது. அதில் புதிது புதிதாய்ப் பொருள் பல கிடைக்கும். என் வீட்டில் தங்கி யிருக்கும் போதெல்லாம் அக்கடைக்குப் போவதை வழக்கமாகக் கொண்டிருந்தார். மணிக் கணக்கில் பொருட்களை எடுத்துப் பார்த்துக் கொண்டிருப்பார். சில பொருட்களின் உபயோகம் என்ன என்பதை அறிய, "இது எதற்காக?" என அவரிடம் கேட்பேன். "கடைக்காரரைக் கேள்" என்பார் அவர். கடைக் காரரைக் கேட்டால், அவர், தம் கடையில் தாமே விற்கும் பொருளின் உபயோகத்தைக் கூற முடியாமல் விழிப்பார். அடிப்பொடியோ, அதன் உபயோகம் என்னவென்று ஊகித்துச் சொல்லி விடுவார். கடைக்காரரும் நானும் வியப்பில் மூழ்கி மகிழ்வோம். இவ்வாறு பல தடவை.

வைகுண்ட ஏகாதசி மகோற்சவத்தையொட்டி நடை பெறும் கம்பன் விழாவில் கலந்து கொண்ட பின், ஓரிரு தினங்கள் கள்ளிப்பட்டியில் தங்கிச் செல்வார். (23 ஆண்டுகள் தவருமல் அவர் கலந்து கொண்ட பாக்கியம் எங்களுக்குண்டு.) ஏகாதசியன்று விடிய விடிய விழித்திருந்து விட்டு, மறுநாள்

துவாதசி பகலிலும் தூங்காமலிருந்து, மாலையில் சந்திர தரிசனம் பார்த்து விட்டுத்தான் தூங்க வேண்டும். பேராசிரியர் அ. ச. ஞா., தமிழ்க் கடல் ராமராசன் போன்ருரும் உடனிருப்பர். விரதமிருக்கும் என்போன்ருரைப் பகலில் தூங்க விடாமல் காப்பது அடிப்பொடியின் பொறுப்பு. வெட்டிப் பேச்சே இருக்காது. அபூர்வ விஷயங்கள், அரிய விஷயங்கள் அப்போது அவரிடமிருந்து வெளிவரும்.

கைக்கடிகார உலகில் 'ஒமேகா' (Omega) பிரசித்தமானது. ஒரு சமயம் கடிகாரங்கள் பற்றிப் பேச்சு வந்தபோது, "ஒமேகா என்று ஏன் பெயர் வைத்தான்? தெரியுமா?" என்ருர் தெரியாது என்றேன். "ஒமேகா என்பது கிரேக்க எழுத்துக்களில் கடைசியெழுத்து, இதற்கு மேல் வேறு எழுத்து கிடையாது. அது போல், இதற்கு மேல் ஒரு கடிகாரம் கிடையாது. இனியொருவர் செய்யவும் முடியாது என்பதைக் குறிக்க இப் பெயரை வைத்தான்" என்ருர். நாங்கள் வியப்பிலாழ்ந்தோம்.

மற்ருெரு சமயம், ஏதோ ஒன்றைப் பற்றித் தீவிரமாக விவாதம் நடந்து கொண்டிருந்தது — அடிப்பொடியின் தலைமையில் தான். ('அடிப்பொடி கலந்து கொள்ளும் கூட்டங்களில் அவர் தாம் தலைவர். வேருெருவர் அந்த இடத்தில் இருக்க விரும்பார்.) விவாதத்தில் கலந்து கொண்ட ஓர் அன்பர், எதிராளியைப் பார்த்துச் "சும்மா விதண்டாவாதம் செய்யாதீர்." — என்ருர். உடனே அடிப்பொடியவர்கள், "விதண்டாவாதம் என்பதன் பொருள் தெரியுமா?" — என்ருர் யாவரும் விழித்தோம். ஆளுக்கொரு பொருள் கூறினேம். சரியாக அமையவில்லை. இறுதியில் அவரே விளக்கினர். "வித் (து) + அண்ட (ம்) + வாதம் = விதண்டாவாதம். வித்து முதலா? அண்டம் முதலா? இந்த ஆராய்ச்சிக்கு முடிவு கிடையாது. அது போல் முடிவு காண முடியாமல் விவாதித்துக் கொண்டே போகும் வாதம் — விதண்டாவாதம்" — என்ருர். ஒன்றின் உட்பொருளை உணராமல் அதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததை எண்ணி வெட்கினேம்.

வேருெரு சமயம். 'ஹம்பக்' என்று அடிக்கடி இப்பொழுது உலக வழக்கில் அடிபடும் சொல், எப்படி வந்தது என விளக்கினர். "முதல் உலகப் போர் நடந்த காலம். ஜெர்மனிக்கும்,

பிரிட்டன் உள்ளிட்ட நேச நாடுகளுக்கும் கடும் போர். பிரசாரத் தந்திரத்தில் ஜெர்மனியின் கை ஓங்கியிருந்தது. ஜெர்மனியிலுள்ள பெரிய நகரங்களுள் ஹம்பர்க் (Hamburg) ஒன்று. அங்கிருந்துதான் ஜெர்மனி, உலகிற்குச் செய்திகளை அனுப்பிக் கொண்டிருந்தது. பல கட்டுக் கதைகளையும், பொய்ச் செய்திகளையும் பிறர் நம்பும் வகையில் ஹம்பர்க்கிலிருந்து அனுப்பிப் பரப்பிக் கொண்டிருந்தது. கடைசியில் ஹம்பர்க் செய்திகள் நம்பத் தகாதவை — ஏமாற்றுபவை எனத் தெரிய வந்தது. அதிலிருந்து, ஏமாற்றும் வேலையை — பொய்யை மெய்போல் காட்டும் வேலையை "ஹம்பக் வேலை" என்று உலகினர் கூற ஆரம்பித்தனர்" — என்று விளக்கி எங்களை வியப்பில் ஆழ்த்தினர்.

அடிப்பொடியவர்கள் யாரிடத்து எதைப் பேச வேண்டுமோ, அதை உணர்ந்து, அதற்குத் தக்கவாறு அவரிடம் பேசி அளவளாவுவார். எனது பண்ணையத்தையும் இதர காரியங்களையும் மேல் பார்க்கும் என் தம்பி பழனிச்சாமியோடு, கள்ளிப்பட்டியில் அவர் தங்கும் போது, பண்ணையம் (பண்ணை) பற்றியும், பண்ணை சம்பந்தப்பட்ட இதர விஷயங்களையும் பற்றித் தெளிவாகப் பேசி, என் தம்பியை வியப்பில் ஆழ்த்துவார். ஒரு சமயம், "வண்டிச் சக்கரங்கள் எந்த மரத்தால் செய்யப்படுகின்றன?" என்று தம்பியைக் கேட்டார். "ஆரக்காலும், வட்டையும் தேக்கில் செய்வார்கள். கும்பத்தைத் தேக்கில் செய்யாமல் கருவேல மரத்தில் செய்வார்கள்." என்றார் என் தம்பி. "மிகவும் சரி! கும்பத்தை மட்டும் தேக்கில் செய்யாமல், கருவேல மரத்தில் செய்வது ஏன்?" என மீண்டும் கேட்டார். தம்பியால் காரணம் சொல்ல இயல வில்லை. உடனே அடிப்பொடியவர்கள் தேக்கு மரத்தின் குணங்களையும், கருவேல மரத்தின் குணங்களையும் விளக்கிக் கும்பம் கருவேல மரத்தால் செய்யப்படுவதற்கான காரணத்தையும் கூறினர். அசந்து போய் விட்டார், என் தம்பி.

இவ்வாறு, பல விஷயங்களிலும் அவர் பெற்றிருந்த அறிவாற்றல் அபரிமிதமானது. சமையல் கலையிலும் வல்லவர். சிறையிலிருந்த போது சமையல் பொறுப்பு இவருடையது தான். கறிவேப்பிலைப் பொடி செய்வது. நல்ல சுண்ணும்பு

தயாரிப்பது போன்ற பல விஷயங்களிலும் கெட்டிக்காரர். இப்படி எத்தனை விஷயங்கள்! எத்தனை பேச்சுக்கள்! இருபத்தெட்டு வருட நட்பில் அவரிடமிருந்து நான் தெரிந்து கொண்டவை எத்தனை எத்தனையோ!

உடன் பிறவாத் தம்பியான என்னிடத்தும், என் மனைவி மக்களிடத்தும். உற்றார் உறவினரிடத்தும் அவர் கொண்டிருந்த பாசம் தான் எவ்வளவு பெரியது! சுக்கிரீவனிடத்து இராமபிரான் கொண்டிருந்த நட்பைத் தான் இணை சொல்ல முடியும். சுக்கிரீவனிடத்து இராமன் கூறிய வார்த்தைகளின் படியே என்னிடத்து அன்பு செலுத்தினர். அவரை நினைத்து, இதனை எழுதும் போது நெஞ்சம் குமுறுகின்றது. வெந்துயரால் விம்முகினறேன். ஏக்கத்தால் செயலிழந்து தவிக்கின்றேன். என் செய்வேன்? இராமபிரான் காப்பாளுக !



## " பேறினியும் வாய்த்திடுமோ? "

[செழுங்கவிச் செம்மல் தி. சு. ஆறுமுகம், நெல்லை நகர்.]

(நாலடித் தரவுக் கொச்சகக் கலிப்பா)

காராருங் குழற்சீதை கரம்பிடித்த ரகுராமன்
சீராருந் திருக்கதையைத் தீயிலிட முனைந்தவொரு
சாராரும் போற்றுமுயர் தகவுடைய அடிப்பொடியே
பேராரும் நினைக்காணும் பேறினியும் வாய்த்திடுமோ?

இம்மாநி லத்தெங்கும் இணையில்லாக் கம்பனையே
அம்மா! நீ பரப்பியபே ரதிசயமுஞ் சொலலெளிதோ?
"எம்மான் அக் கம்பனே என் இறை"யெனவே போற்றியநற்
பெம்மானே நினைக்காணும் பேறினியும் வாய்த்திடுமோ?

ஒட்டியவாழ் நாளனைத்தும் உயர்கம்பன் பணிக்கெனவே
கொட்டியநற் றிருமகனே கோமானே அடிப்பொடியே
கிட்டிவரும் நண்பருள்ளம் கிளர்ந்தெழச்சொல் லாடுமதிப்
பெட்டகமே நினைக்காணும் பேறினியும் வாய்த்திடுமோ?

கற்றவரும் மற்றவருங் கண்கலங்க நினைநினைந்தே
உற்றவரும் நண்பரும்தம் உளந்துடிக்கப் புவியிலுனைச்
சுற்ற வரும் புகழ்மறந்து தொலைதூரம் சென்றதென்? எம்
பெற்றவனே நினைக்காணும் பேறினியும் வாய்த்திடுமோ?

திட்பமுறு கல்வியனே தெளிந்தாய்ந்த மதிநலத்தாய்
நட்பொளிர்செம் மால்! இடர்க்கு நலியாத மனத்தாய்நின்
கட்புலனுள் நின்றோங்கும் கம்பனடிப் பொடியானே
பெட்புடையாய் நினைக்காணும் பேறினியும் வாய்த்திடுமோ?

(நேரிசை வெண்பா)

கம்ப னடிப்பொடி கண்ட பணிவாழ்க !
அம்புவியில் வாழ்க! அன் னுன்நாமம் — செம்புலமைக்
கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க !
இம்பர் மனத்தென்று மே.

## " அவர் ஒரு புதிர் ! "

அ. அறிவொளி M. A., 142, கனக சபை நகர், சிதம்பரம்-1.

அமரர் சா. கணேசனாரின் கொள்கை, செயல், புகழ் ஆகியவை உலகியலுக்குப் புதிர்களே!

"ஒரு பெரிய விளம்பரம் கிடைத்தால் கம்பனுக்கு நானும் தொண்டு செய்வேன்" — சில சுவரொட்டி மனங்களின் வாதம் இது!

கம்பனடிப் பொடிக்கு விளம்பர ஆசை இருந்திருந்தால் சட்டை போடாத தொண்டராகவே இருந்திருக்க மாட்டார் — ஹிட்லர் இரும்புக் கவசத்தைப் பனியனுகப் போட்டுக்கொண்டு தன்னை மிடுக்காகக் காட்டிக் கொண்டான் — விளம்பரப் பிரியர்களின் முதன்மையான பிரியமே தோற்றப் பொலிவுதான் — அந்தப் பிரியம் கம்பனடிப் பொடிக்கு இல்லை.

"பலரைச் சார்பாளராகத் தமக்கு ஆக்கினரே" இது அரைவேக்காடுகளின் அடுத்த வாதம் — மேடையில் 'சோடா' உடைத்துக் கொடுக்கும் சேவகத்தனம் உடைய கம்பனடிப் பொடிக்குத் தலைமை மோகம் இருக்க முடியாது. ஆகவே, சகாக்களை அவர் சேர்க்க விரும்பவில்லை.

"வசூல் வாய்ப்புகளையே, எங்கும் பார்க்கும் உலகியலில் கம்பனடிப் பொடிக்கும் அந்த மோகம் இருக்குமோ?" — முந்திரிக்கொட்டைகளின் மூடவாதமிது.

அவர் தேர்தலில் ஒருமுறை தோற்றார் — காரணம் — காட்டவேண்டியதைக் காட்டிப் பெறவேண்டியதைப் பெறத் தெரியாமையால்! — இது பற்றி வழக்கு மன்றத்திற்குச் சென்றார். அதற்காக வழக்கு நிதி கேட்டிருந்தால், பல இலட்சங்கள் திரண்டிருக்கும். ஆனால், மிக உயர்ந்த விலையுள்ள தமது ரேடியோவை விற்றுத்தான் வழக்காடினரே தவிர, வசூல் செய்ய விரும்பவில்லை.

அவரிடம், முத்துராமலிங்கத் தேவர் ஒரு முறை சொன்னார்: "நீங்கள் நான் சொல்லும் ஒரு தொகுதியில் நிற்கிறேன் என்று விண்ணப்பத்தாளில் கையெழுத்து மட்டும் போடுங்கள். உங்களை அன்றே எம். எல். ஏ. ஆக்குகிறேன்" என்று.

இதைச் செய்திருந்தால், அரசர்போல் செல்வாக்குடைய தேவர் சொன்னபடியே செய்திருப்பார். 'தானாக நின்று வெற்றி பெறாமல், வேறு ஒருவர் புகழைப் பயன் கொண்டு வெல்ல மாட்டேன்' — என்றாரே தவிர, நாற்காலிக்காக ஓடிப்போய்க் கட்டியங்கூறாத தகைமையவர்; ஆகையால் கம்பனடிப் பொடியின் நேர்மை சந்தேகத்துக்கு அப்பாற்பட்டது.

இவருடைய குலத்தில் பிறந்த அறிஞர் ஒருவர், கல்லூரி முதல்வருக்கு இவரிடம் பரிந்துரை கேட்டபோது "நீங்கள் என் சாதி என்ற ஒரு காரணத்துக்காக மட்டும் பரிந்துரை செய்ய மாட்டேன்" என்ற தள்ளரிய பெருநீதி கொண்டவர் கம்பனடிப் பொடி.

காங்கிரஸ் தமிழ் நாடு தலைவர் பதவிக்கு இவர் நின்று ஒரே வாக்கில் தோற்றார். அந்த வாக்கை இவருக்குப் போடாதவர் இவருடைய நண்பர். அதற்குக் காரணம் அவர் என்ன சொன்னார் தெரியுமா? "கம்பனடிப் பொடி (சா. க.) என்னிடம் வாக்குக் கேட்கவில்லை; ஆகவே, போடவில்லை" என்று கூறினார்.

"ஒரு பெரிய வாய்ப்பைத் தமது வாக்கினால் தட்டிவிட்டாரே" என்று பகைக்காமல் இறுதிவரை அவருடன் சிறந்த நண்பராகவே இருந்தார். "என் தொண்டுக்கு வாக்குப் போடட்டும்; நான் கேட்டதால் மட்டும் போடக்கூடாது" என்று இவர் கருதினார்.

நீதி அவருக்குச் சட்டை! தொண்டு அவருக்கு விளம்பரம்! மானம் அவருக்குச் செல்வம்! அவர் கருடன்! ஊர்க்குருவிகளுக்கு அவரின் உச்சம் தெரியாது! அவர் சிங்கம்! செம்மறியாடுகளுக்கு அவரின் சிறப்பு புரியாது! எனவே, கம்பனும் கடவுளும்தான் அவரை முழுதும் புரிந்துகொண்டார்கள். ஆகவே, அவர் ஒரு புதிர்!

---

# கம்பன் அடி பணிந்துய்ந்தவர்!.

---

(டாக்டர் தி. வைத்தமாநிதி M. A., Ph.D. அவர்கள்,
துணை முதல்வர், ஆதித்தனார் கல்லூரி, திருச்செந்தூர்)

---

கம்பன் அடிப்பொடி என்று நாம் அன்போடும் மன நிறைவோடும் அழைத்து வந்த, கம்பன் புகழ் பாடி கன்னித் தமிழ் வளர்த்த, செம்மல், சா. கணேசன், அமரராகிவிட்டார். அன்னாரது பெயரிலே தொக்கி நிற்கும் பண்புகளை எண்ணிப் பார்த்தால் 'சா. கணேசன்' அவர்கள் உன்னதமான முறையாக, வழியமைப்பாக இன்றும் நிலவுகின்றார் என்றே கருதத் தோன்றுகிறது.

காரைக்குடி நகரிலே, கம்பன் விழாவினை நடத்தத் தொடங்கிய காலத்தைச் சார்ந்த நிகழ்ச்சிகள் சில இப்போது என் நினைவுக்கு வருகின்றன. பேராசிரியர் அ. சீநிவாச ராகவன், ஆராய்ச்சிப் பேரறிஞர் வையாபுரிப் பிள்ளை, இலக்கிய ரஸிகர் தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், ஜஸ்டிஸ் மகராஜன் ஆகிய அறிஞர் பெருமக்களைக் கொண்டு, ஏறத்தாழ நாற்பது வருடங்களுக்கு முன்னர், காரைக்குடி நகரிலும், நாட்டரசன் கோட்டையில் கம்பன் சமாதியிலும், கம்பன் விழா நிகழ்ச்சிகளைக் கோலாகலத்தோடும், பெரும் பொருள் செலவிலும் தோற்றுவித்தார்கள். கலைப்பாங்கோடும், தமிழ்ப் பற்றோடும், இறையன்போடும் அவர்கள் அப்போது நடத்திக் காட்டும் போது கொண்டிருந்த ஊக்கமும், ஈடுபாடும் இடையறாது வளர்ந்து, இன்று நாம் காண்கின்ற கம்பன் மணி மண்டபத்தில் வருடந் தோறும் நடைபெறும், பெரு விழா வரை மலர்ந்துள்ளது. இந்த முயற்சியிலே சா. கணேசன் என்ற கம்பன் பக்தரின் சத்திய வழிபாடு கலந்து நிறைந்துள்ளது. அதிலே தான் மகாத்மா காந்தியின் சத்திய தரிசனத்தைச் செயல் முறையாக்கிய தத்துவமும் பொதிந்துள்ளது.

சா. கணேசன் அவர்களது தேசப் பற்று, தமிழ்ப்பற்று மனிதாபிமானம், இறைப்பற்று, உண்மை நாட்டம் ஆகியவைகளைப் பலரும் அறிவார்கள். இந்தப் பற்றுகளுக்கும் பண்பு

நலன்களுக்கும் அடித்தலம் அவருக்குள்ளே, சூக்குமமாக நிலவிய கம்பன் பற்றே என்பதை, அவர் வாழ்ந்து காட்டிய—கைக்கொண்ட கம்பனின் பணியால் அறியலாம்.

"மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள்" என்று கம்பன் குறிப்பிடுகின்ற பேரருள், "கால்தரை தோயக் கட்புலனாகி" இந்நிலத்தே இராமன் என்ற அவதாரமாகி வந்து, இன்னருளைத் தானே ஈந்து ஆற்றிய சேவையைக் கம்பனின் இராம காதை, சத்தியதரிசனமாகவே தருகிறது என்று உணர்ந்தார் சா. கணேசன். அந்த உணர்வோடுதானே இந்நாள் வரை, அவரது பூத உடல் மறையும் வரையில், வழிபட்டு வந்துள்ளார்கள். ஆகவே தான் அவர்கள் பல மேடைகளிலும் தனிப் பேச்சுக்களிலும் கம்பனைக் குறிப்பிட நேர்ந்த போதெல்லாம் "எந்தைபிரான் கம்பன்" என்றே பக்தியுடன் கூறுவார்கள்.

கடந்த அரை நூற்றாண்டுக் காலத் தமிழ் நாட்டு வரலாற்றில் சா. கணேசன் அவர்களது பணி, அழுத்தமான தமிழ்ப் பணி; அதற்கென்று தனியிடம் தேர்ந்து கொண்ட உன்னதமான பணியும் கூட. "சா. க" அவர்களது தனி வாழ்க்கையை அவ்வரலாற்றிலிருந்து பிரித்துப் பார்க்க இயலாது. நம் தேச விடுதலைப் போராட்டத்தில் அவர்கள் கொண்ட பங்கினையும் பணியினையும், அரசியல் விடுதலை பெற்ற பின் நாடு கண்ட சிதல்களைப் போக்க இராஜாஜியுடன் அவர் இணைந்து நின்று நாட்டின் பொருளாதார மேம்பாட்டிற்காக ஆற்றிய பணியையும், அப்போதெல்லாம் மறவாமல் தமிழ்ப் பணியாகக் கம்பன் பணியாற்றிய பாங்கையும், தமிழ் கூறும் நல்லுலகு மட்டுமன்றி, மற்றையோரும் அறிவார்கள். ஆனால் இவற்றுளெல்லாம் "சா. கா." அவளர்களது பெயரை நிலைத்து நிற்கச் செய்வது, கடந்த ஐம்பதாண்டுக் காலமாகக் காரைக்குடி நகரிலும், அதையடுத்த கம்பன் சமாதி கொண்டுள்ள இடமாகக் கருதப்பெறுகிற நாட்டரசன் கோட்டை கம்பன் மேட்டிலும் ஆண்டுதோறும், பங்குனி மாதத்தில் அவர்களால் நடத்தப் பெறுகிற கம்பன் திருநாளே யாகும். அதனுடன் இணைந்து, நம் தமிழகத்திலும், பாரதத்தின் மற்றைய மாநிலங்களிலும், பாரதத்திற்கு வெளியேயும், கம்பன் கழகங்களைத் தோற்றுவித்து, காரைக்குடிக் கழக உறுப்புகளாக்கிக் கம்பன் காட்டும்

செம்பொருளை உணரவும், அதனைச் சேர அக்கவிஞனின் ஈரத் தமிழ்க் கவிதை காட்டும் வழியை உணரவும், வகுத்துள்ள முயற்சி ஒப்பற்றதோர் முயற்சியாகும்.

உலகப் புகழ் பெற்ற ஆங்கில நாடகாசிரியர். ஷேக்ஸ்பியருக்காக அவர் பிறந்த ஊரிலே நடத்தப்பெறும் வருடாந்திர விழாவும் கூட தரத்திலும், பாங்கிலும் காரைக்குடி கம்பன் விழாவிற்கு ஈடாகுமா என்றே கேட்கத்தோன்றுகிறது, என்பதே அவ்விழாவினைக் கண்ட அன்பர் சிலரின் கருத்தாகும். இலக்கிய விழாவொன்றிற்கு இத்தகைய மேன்மையும், ஊக்கமும், அவற்றை உணரும் மக்கள் கூட்டமும், வேறு எங்கும் காண முடிவதில்லை என்பதே அறிஞரின் அபிப்பிராயம். அத்தகைய சிறப்புமிக்க நிகழ்ச்சியாக்கிக், காரைக்குடி கம்பன் விழா என்பது, தமிழ் நாட்டின், தமிழின், சிறப்பான விழா, தவருது நடக்கும் விழா, என்ற பெருமையைச் சேர்த்துத்தந்துள்ளார் கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்கள்.

"கம்பனைப் பயிலக் கூடாது, கம்பனையே அழித்து விட வேண்டும்" என்ற இயக்கம் சிலரால் தோற்றுவிக்கப்பட்ட உடனே, அந்த இயக்கத்தை எதிர்த்துக் கம்பனைப் பயில வைக்கும், இராம காதையின் சிறப்புணர்த்தும் பெரு முயற்சியில் ஈடுபட்டு, அயராது உழைத்து உழைத்து வெற்றி கண்ட சா. கணேசன் அவர்களின் தொண்டு, வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. "கம்பனை இழந்தால் தமிழில்லை. தமிழனின் மேன்மையில்லை, ஏன், உலகுக்கே, மெய்ப் பொருள் நாட்டத்தின் அருமையான அங்கமே இல்லாது போய் விடும். கம்பன் உலக மகா கவி; அந்தத் தெய்வத் தமிழ்க் கவிஞனுக்குரிய அரியாசனத்தில் அமர வேறு கவிஞனே உலகில் இல்லை என்ருகி விடும்," என்று உலகமே ஒப்புக் கொள்ளத்தக்க வகையிலே கம்பன் விழாவினையும், கம்பன் கழகத்தினையும், அதன் கிளைகளையும், ஒரு பெரிய கம்பன் இயக்கமாகவே "சா. க." அவர்கள் தோற்றுவித்தார்கள்.

இராவணன், உயிர்க் குலத்தின் தாயான சீதையைத் தூக்கிச் சென்ற போது, அவளை மீட்பதற்காகப் போராடிப் பெரியவுடையாரான சடாயு, அந்த முயற்சியிலே உயிரையே தியாகம் செய்தார், ஆனல், சா. கணேசன் அவர்கள்

கம்பனையே அழிக்க முற்பட்டோரிடமிருந்து கம்பனை மீட்டு என்றென்றும் ஒளிவிட்டுக் கொண்டிருக்கும், விளக்கமாக்கி வைத்துள்ள வெற்றி, இராமாயணச் சடாயுவுக்கே கிடைக்காத வெற்றி எனக் கூறுவது பொருத்தமே. அதற்கும் மேலான வெற்றி, கம்பன் எதிர்ப்புக் கொள்கையில் தீவிரம் காட்டிய அணியைச் சார்ந்தவர்களையே பின்னாட்களில், காரைக்குடி கம்பன் விழா அரங்கிலேயே ஏற்றிக், கம்பனின் பெருமையைப் பேசவும், கேட்கவும் வைத்தது ஆகும்.

காரைக்குடி கம்பன் விழாவின் தலைமையுரைகளும், கருத்தரங்குகளும், உரைக்கோவைகளும், பட்டிமண்டபமும் மேல் முறையீடும், நாட்டரசன் கோட்டை கம்பன் சமாதி வழிபாடும், நற்றமிழ் முற்ற நிகழ்ச்சிகளும், அருஞ்சொல்லாக்கமும், தமிழ் வரலாற்றில் தனியிடம் பெறும் சிறப்புடையவை யாகிவிட்டன. அவைகள் படைத்துக் காட்டியுள்ள தரம் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. இந்த விழா நிகழ்ச்சிகளில் 'சா. க.' அவர்கள் பாதுகாத்து வரும் இலக்கிய உயர்வு. காலம் தவறாமை, மற்றொன்று விரிக்காமை ஆகிய அம்சங்கள் சான்றோர்களின் போற்றுதலுக்குரியவையாம்.

எனக்குத் தெரிந்து, இரண்டே சந்தர்ப்பங்களில் கம்பன் விழா நிகழ்ச்சிகளில், வேறு நிகழ்ச்சிகளைச் சேர்க்க அவர்கள் அனுமதித்தார்கள். ஒன்று 1961ல், மகாகவி தாகுரிலிருந்து மொழி பெயர்த்துப், பேராசிரியர் அ சீ. ரா. அவர்கள் வடிவாக்கி யிருந்த கவியரர் கண்ட கவிதை என்ற நூல் வெளியீடு. உயர் நீதிபதி பி. எஸ். கைலாசம் அவர்களின் சீரிய தலைமையில், கம்பன் திருநாளில் ஒருநாள் மாலையில் ஏறத்தாழ ஒரு மணி நேரம், இந்த நிகழ்ச்சியை அமைத்தார் 'சா. க' அவர்கள். அவ் விழாவில் பங்கு கொண்டு சொற்பெருக்காற்றியவர்கள் கம்பன் கழகத்தின் சிறப்பான உறுப்பினர்களே. காரைக்குடி கம்பன் கழகக் குடும்பத்தில்', கழகம் காண துணை நின்றவரும், கம்பனை வழிபட்டுப் பரப்புவதில் எல்லையில்லா ஈடுபாடும் கொண்டு, தமக்கு அண்ணனாகியிருந்த அ. சீ. ரா. வுக்காக, 'சா. க.' அவர்களின் கம்பன காதலால் நிறைவேற்றப்பட்ட தொண்டே அந்த நிகழ்ச்சி. அ. சீ. ரா. அவர்கள் தந்த தாகுரின் தமிழ் வடிவம், கம்பன் கவியில் தோய்ந்து, தன் உயிர்த் தத்துவமாக்கிக் கொண்டிருந்ததால், முளைத்த கவிதைச் சுவையே; பேரு

ளேக் காண, உதவும் முயற்சியே எனக் கருதியே, அந் நிகழ்ச்சியை 'சா. க.' அமைத்தார்கள் என்றுதான் பலரும் கருதினர்.

பிறிதொரு நிகழ்ச்சி 1981 மார்ச்சுத் திங்களில் நேர்ந்தது; தாய்க் கழகமான காரைக்குடி கம்பன் கழகம் பணித்தபடியே வீரவிளக்கு வ. வே. சு. ஐயர் அவர்களின் தமிழ்ப் பணியையும், கம்பன் பணியையும் ஓராண்டுக்காலம், கிளைக்கழகங்கள் மூலம் கொண்டாடிப் பிறகு, ஐயரின் நூற்றாண்டு விழாவினைக், காரைக்குடியில் நிறைவு செய்தார் 'சா. க' அவர்கள். கம்பன் ஒப்பற்ற உலக மகா கவிஞன் என்று காட்டும் ஆங்கில ஆய்வுக் கட்டுரைகளையும் கம்பன் பாடல்களில் ஏறத்தாழ நான்கா யிரத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் தந்துள்ளதையும், நினைவு கொள்ளும் வகையில், எங்கள் நெல்லை மாவட்டக் கம்பன் கழகம், வ. வே. சு. ஐயர் அவர்களைப் பற்றிய சிறிய நூலொன்றினைப் பதிப்பித்தது. அந்த நூலின் வெளியீட்டை, நாட்டரசன் கோட்டை கம்பன் சமாதியில் நடைபெறும் விழா நிகழ்ச்சியின் ஒரு அம்சமாக்கித் தந்ததுதான், முன்னர் குறிப் பிட்ட இரண்டாவது நிகழ்ச்சி. 'சா. க.' அவர்களே அந்நூலை வெளியிட்டு, முதல் பிரதியை வ. வே. சு. ஐயர் அவர்களின் திருமகனார் டாக்டர் திரு. வே. சு. கிருஷ்ணமூர்த்தி அவர் களிடம் தந்தார்கள்.

கம்பன் அடிப்பொடியவர்களின் கம்பன் காதல் வ. வே. சு. ஐயர் அவர்களின் கம்பராமாயண ரசனையைப் போற்றிய பாங்கினை உணர்த்தும் முயற்சியாகவும், எங்கள் நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்தில் அவர்கள் வைத்திருந்த நம்பிக்கையைக் காட்டும் செயலாகவும் அந்த நிகழ்ச்சி அமைந் தது. இந்த நிகழ்ச்சியில் மற்றொரு அம்சமும் உண்டு. அந்த நூலினை எழுதியது, இக்கட்டுரை தரும் வாய்ப்பினைப் பெற்ற எளியேனே. பேராசிரியர் அ. சீ. ராவின் நூலினைக் கம்பன் விழாவிலே வெளியிட மனங் கொண்ட "சா. க." அவர்கள், அன்னாரது மாணாக்கனான எனது நூலையும் கம்பன் விழாவிலே வெளியிட்ட போது பேராசிரியர் அ. சீ. ராவிடம் அவர்கள் கொண்டிருந்த அன்பும் மதிப்புமே வெளியாயிற்றோ, என்றே எங்களை எண்ண வைத்தது. ஏனென்றால், வ. வே. சு. ஐயர் அவர்களின் நினைவையும், கம்பராமாயண ஆய்வையும் போற்

றும் அந்நூல் எளிய முயற்சியே. அதனோடு, மற்றொரு சிறப்பு எங்கள் நெல்லை மாவட்டக் கம்பன் கழகத்திற்காக நேர்ந்தது. எங்கள் கழகப் புரவலர் உயர்திரு. சுந்தரம் பிள்ளையவர்கள் "கம்பனின் கொடையைப்" பரப்பும் ஒரு நூலினை அநேகமாக ஒவ்வொரு ஆண்டும், இந்த விழாவிற்கு நாங்கள் தருவோம் என்று உறுதியளித்திருந்தார்கள். ஆகவே, அந்த உறுதியை நிறைவேற்றியபோது, எங்கள் கழகத்தைப் பாராட்டும் அளவிலே, அந்நூல் வெளியீட்டினை, நாட்டரசன் கோட்டை விழாவில் சீரிய முறையில் வைத்துக்கொண்டது, 'சா. க.' அவர்களது கம்பனைப் பரப்பும் முயற்சியின் வெளிப்பாடேயாகும்.

இப்படியெல்லாம் எண்ணிப் பார்த்துக், கம்பன் என்ற மகாகவியின் அருளுக்குள்ளே தன்னைப் பூரணமாகக் கரைத்துக் கொண்டுவிட்ட சா. கணேசன் அவர்களது ஆற்றலையும், பணியையும் நினைவு கொள்கிறோம். அவர்கள் சுட்டிக் காட்டிய கம்பன் வழியிலே செல்வோம். அறத்தினை நிலைநிறுத்த வந்த சத்திய மூர்த்தி இராகவனும் அவன் புகழினைச் செவிக்குத் தேன் எனத் திருத்தும் கம்பனும், அம் மகாகவியின் அடிபணிந்துய்ந்த சா. கணேசன் அவர்களும், நமக்குத் தோன்றாத் துணையாக நிற்பார்களாக.

தமிழ்த்தாய்க் கோயில் உள்ளிட்ட கம்பன் மணி மண்டபத்தைப் பூர்த்தி செய்வது, கம்பன் விழாவினைச் செம்மையாக நடத்துவது, கம்பன் காட்டும் செம்பொருளை வாழ்க்கையின் நோக்கமாக அமைக்கக் கம்பன் கழகங்கள் வழியாகப் பாடு படுவது ஆகியவையே 'சா. க.' அவர்கள் நமக்கெல்லாம் தந்துள்ள பணிகள். இப்பணிகள் உண்மையில் சா. கணேசன் அவர்கள் 'ஈந்தவை.' அவை கொடையே யாகும்.

கம்பனின் செஞ்சொல், கொடையை அப்படித்தானே இனங் காட்டுகிறது. — "ஈந்தவரின்றி இருந்தவர் யாரே?" என்று.



# "என் சகோதரர், திரு. சா. கணேசன் அவர்கள்."

---

ஆத்தங்குடி, பெ. மு சுப்பையா செட்டியார், கரூர்.

---

திரு. கம்பன் அடிப்பொடி, சா. கணேசன் அவர்கள் எனக்கு ஓர் உடன்பிறவாச் சகோதரர். 25 வயது முதல் 80 வயது வரை, திரு. சா. கணேசன் அவர்களுடன் ஒரு நெருங்கிய சகோதர வாஞ்சை நிலைத்திருந்தது. கடந்த ஐந்தாறு மாதங்களாகச் சகோதரரைப் பிரிந்த மனவேதனை யிடையே, "அவர்கள் விட்டுச் சென்ற பணிகளை எப்படியாவது, எவராவது, எந்த அளவிலாவது நிறைவேற்றமாட்டார்களா?" என்ற எண்ணத் தவிப்பு இருந்து கொண்டே இருக்கின்றது. அவரது பணிகளை முற்றுபெறச் செய்ய முன்நின்று துடிக்கும் நெல்லை கம்பன் கழகத்தவரின் வேண்டுதலின் பேரில் என் சகோதர நினைவுகள் சிலவற்றை இங்கு நினைவு கூர்ந் துள்ளேன்.

பர்மாவிலும், மலேசியாவிலும், செட்டி நாட்டிலும் நிறைந்த செல்வமும், செல்வாக்கும் தேடி வைத்திருந்த திரு. சாமினாதன் செட்டியாரவர்கள், திரு. சா. கணேசன் அவர்களை இளவயதிலேயே விட்டுப் பிரிந்து விட்டார்கள். அரங்க வாத்தியாரிடம் திண்ணைப் படிப்பு மூலம் எழுத்தறிவு பெற்ற சா. கணேசன் அவர்கள் அடுத்து பள்ளிப் படிப்பு, கல்லூரிப் படிப்பு, சட்டப் படிப்பு, தொழில் படிப்பு, என்று எதுவும் படித்து விடவில்லை. தேசத் தொண்டில் கொண்டிருந்த பற்று அவர்களுக்கு அதற்கு வாய்ப்பும் கொடுக்கவில்லை. அவர்கள் பெற்றிருந்த அனுபவக்கல்வி இன்ன துறைதான் என்றில்லாது எல்லாத் துறைகளிலும், தமிழ் மொழிதான் என்றில்லாது, ஆங்கிலம், ஹிந்தி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளிலும் அவர்களைச் சிறக்கச் செய்திருந்தது. கலைமகள் அவர்களிடம் குடி புகுந்து கொண்டாள் என்று கூடச் சொல்லலாம். குருபக்தியோடு அவர்கள் பலரிடம் பழகிக் கல்வி பெற்றார்கள். அவர்களது வாழ்நாளில் இருந்து அவ்வனுபவக் கல்வி புகட்டியவர்களையும், அவர்களது வாழ்நாளுக்கு அப்பாற்பட்டவர்களையும்

கூட அவர்கள் வாழ்த்தி வணங்கியதை அவர்கள் இயற்றிய 'தமிழ்த் தொண்டத் தொகை' பாடல்கள் முப்பதும் காட்டு கின்றன. அதில் ஒரு பாடல்.

“ வழுத்துமென்தாய் உயர்நாச்சி யம்மையார்க்கு மடியேன்
மதித்தந்தை திருசாமி நாதற்கு மடியேன்
எழுத்தறிவு நல்கரங்க வாத்தியார்க்கு மடியேன்
இலக்கியஞ்சொல் சிதம்பரப்பேர் ஏந்தலுக்கு மடியேன்
பழுத்ததமிழ் நிறைசேதுப் பிள்ளைக்கு மடியேன்
பலவழியில் ஊக்குவித்த ராஜாஜிக் கடியேன்
முழுத்தகுதிக் 'குருதேவர்' தெ. பொ. மீக் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே”

தேசத் தொண்டில் சகோதரர் திரு. சா. கணேசன் அவர்கள் கொண்டிருந்த ஈடுபாடு பிரமிக்கத்தக்கதொன்று. தந்தையார் நடத்தி வந்த தொழில் முறைகளைக் கவனிக்க அவர்களது தேசப்பற்று இடம் கொடுக்கவில்லை. அதனால் அவர்களது திரண்ட செல்வம் குறைந்தது தேசத் தொண்டிற்கும், இலக்கியத் தொண்டிற்கும் அவர்கள் ஒதுக்கிய கவனத்தில் ஒரு வீசம் அளவு தொழில் முறைகளுக்கு ஒதுக்கியிருந்தால் கம்பன் மணி மண்டபத்தை அவர்கள் ஒருவராகவே முடித்திருப்பார்கள்.

ஒரு முறை பம்பாயிலிருந்து நாமக்கல் கவிஞர், திரு' சா. கணேசன் ஆகியோருடன் சென்னைக்கு ரயிலில் திரும்பி வந்து கொண்டிருந்தேன். காது மந்தத் தன்மையால் நானும், கவிஞரும் உரக்கப் பேசிக்கொண்டிருந்தது, அந்த ரயில்ப் பெட்டியில், பயணம் செய்து கொண்டிருந்த ஒரு ஆங்கிலேயருக்குப் பிடிக்கவில்லை. அவர் எங்களைக் கண்டித்தார். திரு சா. கணேசன் அவர்கள் அவரிடம் எங்கள் காது மந்தத் தன்மையை எடுத்துக் கூறிப் பொறுத்துக் கொள்ளச் சொன்னார்கள். இரண்டு, மூன்று முறை அவரைச் சாந்தப்படுத்த முயன்றார்கள். ஆனால் அவர் விடவில்லை. அவரது விடாப் பிடியான கோபத்தில், நாங்கள் இந்தியர் அவர் ஆங்கிலேயர் என்ற எற்றத்தாழ்வு உணர்வும், இளப்பமான கருத்தோட்டமும் இருப்பதைத் திரு சா. கணேசன் அவர்கள் புரிந்துகொண்

டார்கள். உடனே 'வந்தேமாதரம்' என்று கர்ச்சித்தார்கள். ரயிலில் பயணம் செய்துகொண்டிருந்த எல்லோரும் திடீரென உணர்வு பெற்று, 'வந்தே மாதரம்' என்று எதிரொலித்தார்கள். ஆங்கிலேயர் அயர்ந்து போனுர். அடுத்த ரயில் நிலையத்தில், ரயிலில் இருந்து அவரை இறக்கி, அதிகாரிகளிடம் 'இடைஞ்சலானவர்' என்று ஒப்படைத்த பிறகே, பயணம் மேற்கொள்ளச் செய்தார்கள்.

யாரிடமும் பிறருக்காக அன்றித் தமக்காக உதவி கேட்கும் எண்ணம் அவர்களிடம் இருந்ததில்லை. சந்தர்ப்பச் சூழ்நிலைகளால், பிறர் அவர்களுக்கு ஏதும் உதவி செய்திருந்தால், என்றென்றும் மறக்காது அதற்குக் கைமாறு செய்ய வாய்ப்பை எதிர்நோக்கிக் கொண்டே இருக்கும் குணம் அவர்களுடையது. தேசியத் தொண்டால் அவர்களது வீடு அவர்கள் கைவிட்டுப் போகும் சூழ்நிலை ஏற்பட்டது. அதை அவர்களுக்குத் தக்கவைக்கும் சிறிய புண்ணியப்பணி எனக்குப் பல ஆண்டுகளுக்கு முன் கிட்டியது. அதை அவர்கள் என்றென்றும் மறக்கவே இல்லை. எதிர்பாராது வட்டியும் முதலுமாகத் திருப்பினுர்கள் அத்தோடு முடிந்தது என்று சும்மா இருக்கவும் இல்லை. இன்னும் ஏதாவது கைம்மாறு செய்ய வாய்ப்புக் கிடைக்காதா என்று எதிர்நோக்கிக் கொண்டே இருந்தார்கள் பல உதவிகளைப் பல சமயங்களில் எனக்குச் செய்த அவர்களது இந்த குணப்போக்கு என்னையும் அவர்களுக்குப் போட்டியாக ஏதேனும் கைம்மாறு செய்யமாட்டோமோ? என்ற தவிப்பை உண்டாக்கித், தொடர்ச்சியாக்கிவிட்டது.

சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களது உள்ளம் தூய்மையானது. அதற்கு மிகுந்த சக்தியும் இருந்தது. நன்கு வளர்ந்த எனது குழந்தைகள் இறந்து, நீண்ட இடைவெளிக்கும் தவிப்பிற்கும் பிறகு 1947ல் என் மனைவி மீண்டும் கருவுற்றிருந்தாள். ஒரு தினம் திரு. சா. கணேசன் அவர்கள் என் வீட்டிற்கு வந்திருந்தார்கள். வந்த இடத்தில் கம்பராமாயணச் சொற்பொழிவை மேற்கொண்டார்கள். சிறிய கிராமத்தில் எதிர்பாராத அளவு, நிறைய அன்பர்கள் திரண்டு விட்டார்கள். சொற்பொழிவு 3 தினங்கள் நிகழ்ந்தது. அனுமன் 'கண்டேன் சீதையை' என்கிற இடம் வந்த போது எனது இல்லத்திற்கு

ஒரு பேரலீஸ்காரர் வந்தார். 'திருடன் அகப்பட்டான்' என்ற செய்தியையும் சொன்னார். ஆம்! ஓரிரு வாரங்களுக்கு முன்னர், நான் சென்னை சென்றிருந்தபோது, தனித்திருந்த எனது மனைவியிடமிருந்து திருடர்கள் நகைகளைப் பறித்துச் சென்றிருந்தனர். அந்தத் திருடர்களைப் பிடித்த செய்திதான், தூய வலிமை மிக்க உள்ளமுடைய அவர்களது சொற்பொழிவின் இடையே வந்தது. அடுத்த சில மாதங்களில் ஆண் குழந்தையும் பிறந்து, எனக்கு வாரிசும் உண்டாகியது. குழந்தை பிறந்ததும், வாழ்த்தவும் வந்தார்கள். கோர்ட், போலீஸ் என்றலைந்த எனக்கு நகைகள் திரும்பக் கிடைக்கவும் செய்தார்கள். அதுமட்டுமல்ல; இந்த நிகழ்ச்சியை நான் மறந்த நிலையில் 35 ஆண்டுகள் கழிந்து, அண்மையில் ஒருமுறை அவர்களே இதை நினைவு கூர்ந்துள்ளார்கள்.

சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களது விடாப்பிடியான பிடிவாதப் போக்கு அவர்களைப் பலருக்கும் கோபக்காரராகவே காட்டும். பலர் இவர்களைப் பகைத்துக்கொண்டும் உள்ளார்கள். இக்குணம் இவர்களுடன் பலரும் பேசுவதற்கே பயப்படும் அளவுக்கு இருந்துள்ளது. சகோதரர் அவர்களைத் தட்டிப் பேசி, எதையும் அவர்களிடம் வெளிப்படையாக எடுத்துச்சொல்லும் அளவுக்கு எனக்கு இடம் கொடுத்திருந்தார்கள். இவர்களைவிட்டு விலகியவர்களைச் சேர்த்து வைக்கும் முயற்சியைப் பல சமயங்களில் மேற்கொண்டுள்ளேன். அச்சமயங்களில் இவர்களைத் தட்டிக் கேட்கும்போது "என் மீதா குற்றம்? நானா சேரமாட்டேன் என்கிறேன்?" என்று கூறி, விலகியவர்கள் செய்த ஒவ்வொரு சிறுஉதவியைக்கூட அச்சமயங்களில் எடுத்துச் சொல்வதையும், நற்குணங்களைப் பாராட்டுவதையும் கண்டு ஆச்சரியப்பட்டிருக்கின்றேன்.

நான் தந்தையாகக் கருதி 'வாப்பா' என்றழைத்த திரு. சி. வி. சிடி. வெங்கடாசலம் செட்டியார் அவர்களும் சகோதரர் திரு. சா. கணேசன் அவர்களும் அழகப்பா கல்லூரி நிர்வாகத்தில் இணைந்து செயல்புரிந்தவர்கள். இருவரும் செட்டி நாட்டுப் பகுதியில் மிக்க செல்வாக்குடையவர்கள். இவ்விருவருக்குமிடையே ஒரு முறை மனத்தாங்கல் ஏற்பட்டுப் பிரிந்துவிட்டார்கள். இவர்களது இந்தப் போக்கு, அரசியல் தேர்தல் களங்களில் கூட நீடித்தது. இருவரும் எப்படியாவது

ஒன்று சேரமாட்டார்களா என்று முயற்சிகள் செய்து இறைவனை வேண்டிய வண்ணம் இருந்த போது, நீண்ட இடைவெளிக்குப் பின் இருவரும் ஒன்று சேர்ந்தார்கள். பிரிந்தவர்கள் கூடினுல் ஏற்படுகின்ற ஒரு எல்லையற்ற அன்பூற்று இருவரிடமும் பெருக் கெடுத்தது. சகோதரர் துவக்கியிருந்த கம்பன் மணி மண்டபப்பணியை திரு. சி. வி. சிடி அவர்களே முன் நின்று முடிக்க முனைந்தார்கள். சகோதரரை இழுத்துக் கொண்டு சென்று பல இடங்களிலும் நன்கொடை திரட்டித் தந்தார்கள். வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்ததுபோல் திரு. சி. வி. சிடி அவர்களை இறைவன் அழைத்துக்கொண்டு விட்டான். அவர்கள் இன்னும் ஓராண்டிருந்திருந்தால் கம்பன் மணிமண்டபப்பணி முற்றிலும் பூர்த்தியாயிருக்குமே என்று திரு. சா. கணேசன் அவர்கள் பலமுறை என்னிடம் கூறியிருக்கிருர்கள்.

நாங்கள் இருவரும் ராஜாஜி பக்தர்கள். ஒருவரை மற்ருெருவர் விஞ்சிவிட வேண்டுமென்ற போட்டிப் போக்கு இருவரிடமும் உண்டு. எனது வீட்டில் நிகழ்ந்த வைபவங்களில் ராஜாஜியின் புத்தகங்களை அச்சிட்டு, எல்லோருக்கும் இலவசமாகக் கொடுக்க நான் முனைந்தேன். 'பஜகோவிந்தம்', 'ஸோக்ரதர்' ஆகிய நூல்களைத் தேர்வு செய்து, அனுமதி பெற்று, அச்சேற்றி முடிக்கும் வரையிலான எல்லா பொறுப்புகளையும் அவர்களே ஏற்றுக்கொண்டு உதவி செய்தார்கள். உதவி செய்ய வந்தவர்கள் ராஜாஜியைப் போற்றி, "ராஜாஜியின் ஒரு தொண்டர் மற்ருெரு தொண்டருக்கு இப்பொறுப்பைக் கொடுப்பதன் மூலம் ராஜாஜிக்குப் பணி செய்ய வாய்ப்பு தந்து போற்றியுள்ளார்." என்ற அளவுக்கு முன்னுரையும் எழுதி அச்சிட்டுள்ளார்கள்.

சகோதரர் அவர்கள் உபயோகிக்கும் பொருள்கள் என்றும் ஒரே மாதிரியாக இருப்பதில் கவனம் செலுத்துபவர்கள். உடை, செருப்பு, பணப்பை எல்லாம் என்றும் ஒரே மாதிரியாக இருக்கும், அவர்களைப் போலவே சட்டையணியாது முரட்டுக் கதர் வேட்டி, துண்டு அணியும் எனக்கு, அந்த '8' கால் ஓரக்கரையில்லாத கதராடை எளிதில் எங்கும் கிடைத்து விடாது. அவர்கள் பேரைச் சொல்லிக் காரைக்குடி

கதர்க் கடையில் கேட்டால் நிச்சயம் கிடைக்கும்; அவர்கள் உபயோகிக்கும் 'மணிப்பர்ஸ்' நிறைய நோட்டுக்களும், சில்லரைகளும் கொள்ளக்கூடிய ஒரு அடக்கமான அமைப் புடையது. ஒரு முறை அதைப் போல் ஒன்று பெற, பல இடங் களில் முயற்சித்துக் கிடைக்காததை அவர்களிடம் கூறினேன், கிடைக்குமிடம் கேட்ட போது 'அது எனக்காகத் தயாராவது', என்று கூறி விட்டு விட்டார்கள். அதைப் பற்றிய நினைப்பே மறந்து போன நிலையில் எதிர்பாராதவிதமாகத் திடீரென்று ஒரு தினம் எனக்கு அதே போல ஒரு 'மனிப்பர்ஸ்' தயார் செய்து கொடுத்து வியப்பில் ஆழ்த்தியுள்ளார்கள்.

1945-ல் எனது குலதெய்வம் பெரியநாயகி அம்மன் அமைந்த வேலங்குடியில் குற்றால முனிவர் டி. கே. சி. தமிழ்க் கடல் ராய. சொ. சீர்திருத்தச் செம்மல் சொ. முருகப்பா இன் னும் பலருடன் திரு. சா. கணேசன் அவர்களும் வந்திருந்து ஜனநடமாட்டம் ஏதுமில்லாத சோலையில் வனபோஜனம் என்ற அமைப்பை ஏற்படுத்திக் கொண்டு, கம்பராமாயணம், திருவாசகம் இன்னும் பிற இலக்கியங்கள் பற்றிச் சம்பாஷித் ததையும் 'தனித்தனி முக்கனி பிழிந்து' என்ற பாடல்படியே கனிகள் பிழிந்து கற்கண்டும், தேனும் சுலந்து உண்டு மகிழ்ந் ததையும் இன்றும் நினைவில் கொள்ள முடிகிறது.

40 ஆண்டுகளாகக் கம்பன் விழாக்களில் சமையல் கூடத்தில் பந்தி விசாரிக்கும் வாய்ப்பை எனக்கு நல்கிப் பல பெரியோர்களை மகிழ்விக்கவும். அவர்களது அன்பையும் நட்பையும் பெறவும் செய்த அவர்களது கருணையை மறக்கவே இயலாது.

புதுடில்லி, அலகாபாத், காசி, சாரநாத், சிம்லா என்று - மூன்று மாதங்கள் அவர்களுடன் மார்கழி மாதக் குளிரில் பல இடங்களுக்கும் சென்ற போது, அவர்கள் தெய்வத் தலங் களில் கொண்டிருந்த பற்றையும், வரலாற்றுச் சின்னங்களைக் கண்ட ஆர்வத்தையும், கடுங்குளிரிலும் சட்டையணியாத பிடி வாதப் போக்கையும், அரசியல் தலைவர்களைக் கண்டு பொது விஷயங்களுக்காகப் பாடுபட்ட திறனையும், புதுடில்லி தமிழ்ச்

சங்கத்தில் பொங்கலன்று (1947) பொங்கல் விழாவில் தமிழ்ச் சொற்பொழிவு ஆற்றிய சிறப்பையும் இன்றைக்கும் எண்ணி மகிழ்ச்சியடைய முடிகிறது.

அவர்கள் ஆவிபிரியும்போது, கோவையில், திரு. ஜி. கே சுந்தரம் அவர்களுடன் ராமபஜனை செய்யும் வாய்ப்பைக் கம்பனும், கன்னித்தமிழ்த் தாயும் எனக்குத் தந்தார்கள். ஆனால் அவர்கள் எப்படியாவது கம்பன் மணிமண்டபப் பணியை முடித்துவிட வேண்டும் என்று கொண்டிருந்த எல்லையற்ற ஆவலைப் பூர்த்தி செய்து அவர்களது மகிழ்வைக் காணும் வாய்ப்பைத் தரவில்லை. அவர்களது ஆத்மா சாந்தியடைய அவர்கள் மேற்கொண்ட பணியை நிறைவேற்றுவது, அவர்களிடம் உதவிபெற்று வளர்ந்து, ஞானம் பெற்றுச் சிறந்த ஆயிரக்கணக்கானவர்களின் கடமையாகும். அவர்களது 'தமிழ்த்தொண்டத் தொகை' இறுதிப் பாடல், கம்பன் அடிப் பொடி பக்தர்களாகிய நம் ஒவ்வொருவருக்கும் அவ்வுணர்வை ஏற்படுத்திப், பணியை முடிக்க, ஆவன செய்யத் தூண்ட இறைவனடி வேண்டுகின்றேன்.

"தொன்றுதொட்டு தமிழ்மரபைக் காப்பார்கட் கடியேன்
துயர்அகலத் தமிழமுதம் ஊட்டுவார்கட் கடியேன்
என்றுமுள தென்தமிழ்த்தாய்க் கெழில்முடியைச் சூட்டும்
எந்தைபிரான் கம்பன்தன் அடியார்க்கும் அடியேன்
நின்றுவளர் கம்பன்அற நிலைகாப்பார்க் கடியேன்
நெடியதமிழ்த் தாய்கோயில் புரப்பார்கட் கடியேன்
முன்றுளிர்க்கும் இடுக்கணவை முரிப்பார்கட் கடியேன்
மும்மைவளர் செந்தமிழ்த்தாய் முளரித்தாள் சரணே."



## அமரர் கம்பனடிப்பொடி பற்றிய நினைவலைகள்.

(திரு. ச. திரவியம் M. A. – பரணை நகர்.)

### கம்பனா? கம்பரா?

"கம்பனைக் கம்பனென்றழைப்பதா? கம்பரென்ழைப் பதா?" என்ற கேள்வி எழுந்தபோது:— பொதுவாகக் கடவுளை நாம் ஆண்டவன், இறைவன் என்றுதான் அழைக்கிறோம். ஆண்டவர், இறைவர் என அழைப்பதில்லை. அவனன்றி அணுவும் அசையாது — என்பதிலும் அவனென்றே கூறு கிறோம். கம்பனடிப் பொடியும் தம்பெயரைக் கணேசன் என்று தான் கூறினர். கணேசர் என்று கூறவில்லை. கம்பர் என் பதைக் கம்பன் என அழைக்கச் செய்து நமக்குக் கம்பனிடம் மிக நெருக்கத்தை உண்டுபண்ணியவர் அமரர் கம்பனடிப் பொடியே.

### கம்பன் உருவம்.

கம்பனடிப் பொடிக்குக் கனவில் கம்பன் உருவக் காட்சி கிடைத்தது. அதுவே ஓவியமாகச் சிற்பமாக வடிவமைப்பட்டு, ஆண்டு பலவாக யாவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் போற் றிப் புகழப்படுகிறது. உண்ணும் சோறு, பருகும் நீர், தின் னுக் வெற்றிலை — எல்லாம் இவருக்குக் கம்பனே. அத்தகைய சா. கணேசன் மாண்ட செய்தியை வெளியிட்ட பத்திரிகை களில் அவர் படத்தைப் போடாதது வருந்தத் தக்கது என்று ஓர் அம்மையார் கூறி வருந்தினர். இலக்கியப் புலவர்கள், இலக்கியக் காவலர்கள் பட வரிசையில் கம்பனடிப் பொடியின் படமும் இடம் பெறும் நாள் வெகுதூரத்திலில்லை. மேலும் அவர் படம் பதிந்திருக்கும் இடம், நம் நெஞ்சம் என்று கூறுவதே பொருத்தமுடைத்து.

### மேடைப் பேச்சு.

கம்பராமாயணக் காவியத் தலைவன் இராமனது பாத்திரம், "ஒரு மகோன்னத பாத்திரம்" என்பதைக் கம்பனடிப் பொடிகள் அடிக்கடி கூறுவார். இவர் வீற்றிருக்கும் மேடையில் யாரேனும் தவருகப் பேசினுல், "இது கோமாளித்தனம்" என்று கூறத் தயங்குவதில்லை. உயர்ந்த ஒரு காப்பியத்தைப் பற்றிய பேச்சும் உயர்தரமாகவே இருக்க வேண்டும். அன்றும், இன்றும், என்றும் பாளை நகரில் கம்பன் கழகத்தில் பேசும் அறிஞர் பலருங்கூட, "இங்கே நான் பேசுவதற்கு அஞ்சுகிறேன்" என்று கூறுவதை நான் பன்முறை கேட்டிருக்கின்றேன். மேடைப் பேச்சு இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர், கம்பனடிப்பொடி அவர்கள்.

### கம்பனடிப் பொடியும் கண்ணதாசனும்.

"நான் கவிஞனுகக் காரணம் கம்பன் தான்" — என்று சொல்லிப் பெருமைப் பட்டவர் கவிஞர் கண்ணதாசன். ஒரு முறை கம்பன் விழாவில் கலந்துகொள்ளக் குறித்த நேரத்தில் வந்து விட்டார். அது அவர் வாழ்வில் அதிசயம்! அங்கே அவர்,

"கடிகாரம் பார்த்தேதான் காரியங்கள் செய்வதெனப்
பிடிவாதம் பிடிக்கின்ற பேரவையின் தலைவர்களே
கடிகாரம் என்பகைவன் கணேசர் பயத்தினிலே
காலத்தை நானறிந்து கடுகியிங்கே ஓடிவந்தேன்."

என்று பாடினுர்.

### முடியும் அடியும்.

முடி, குடை, கோல் — இவை ஆட்சிச் சின்னங்கள், ஆயினும், "செம்மையின் ஆணி" என இராமனுல் போற்றப் பட்ட பரதன், அடியையும் (பாதுகையை) ஆட்சிச் சின்னம்

ஆக்கினன். ஸ்ரீலங்காவிலிருந்து வந்த ஓர் இளைஞர், சா. கணேசன் அவர்களின் பாதுகைகளை யாசித்துப் பெற்றுச் சென்றாராம்; கலியுகப் பரதன்! கம்பனது அடிச் சுவட்டில் நடந்த கால்கள் அணிந்த அணிக்கு எத்துணை மதிப்பு அண்டை நாட்டிலே! நம் நாட்டில் பிறந்த அவர்தம் இல்லத்தையும் அவர் பயன்படுத்திய மாட்சிப் பொருள்களையும், நாம் ஏன் காட்சிப் பொருள்களாக ஆக்கக் கூடாது? அமரர் பாதுகையை அவர் அரண்மனையில் அரியணையில் அமர்த்தி ஆட்சி புரியவைக்கும் மாட்சிதான் என்னே!

## நேருவும் கம்பனடிப்பொடியும்.

காரைக்குடியில், அழகப்பா கல்வி நிறுவனத்திற்கு அடிக்கல் நாட்ட வந்த நேருவிடம், திரு. அழகப்பச் செட்டியார் நம் கணேசனாரைச் சுட்டிக் காட்டி, "இக்கல்வி நிறுவனங்களைத் தோற்றுவிக்கக் காரணமாகத் திகழ்ந்தவர் இவரே" — என்று கூறினார். சட்டை அணியாத கணேசனாரை நேரு பார்த்துச், "சிறையில் வைத்தே இவரை எனக்கு நன்கு தெரியுமே! இவர் தானே கம்பர்?" என்று கேட்டாராம். தம் உள்ளச் சிறையில் அடைபட்ட கம்பராமாயணத்தைச் சிறைக் கோட்டத்தில் உள்ளவர்களுக்கு அந்த நாளில் சொல்லி வைத்த பெருமை அமரர் கம்பனடிப் பொடியையே சாரும். நேரு பெருமகனார், தம்மைக் கம்பர் என்று அழைத்ததற்குத் தாம் தகுதியுடையவரா எனச் சிந்தித்த கணேசனார், தம் பெயரைக் கம்பனடிப்பொடி என மாற்றிக் கொண்டார்.

## கம்பன் விழாவே உயிர் நாடி !

1982. காரைக்குடியில் கம்பன் விழா. மருத்துவ மனையில் இருக்க வேண்டிய கம்பனடிப் பொடி, விழா மேடையில் வீற்றிருக்கின்றார். "விழாவின் இடையில் நான் இறக்க நேரிட்டால், என் பிணத்தை ஓர் அறையில் போட்டுப் பூட்டிவைத்து விட்டு, விழா முடிந்த பின் ஆவன செய்யுங்கள்" என்றாராம் நண்பர்களிடம்! கம்பனடிப் பொடி இறக்க வில்லை. அவர் இன்றும் நம்மோடுதான் இருக்கிறார்; வழி நடத்துகிறார். வாழ்வாங்கு வாழ, அவர் காட்டிய பாதையில் செல்வோமாக!

## முடிவுரை.

கம்பன் சிரத்தில் இராமன் இருப்பதாகக் கொண்டால், கம்பன் காலடியில் இருப்பவர் கம்பனடிப் பொடியார். ஆகவே இராமனையும் கம்பனையும் தாங்கிச் சுமப்பவர் இவரே. தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தவர் கம்பனடிப் பொடி. இமயம் இருக்கும் வரை, அமரர் இவர் புகழுமிருக்கும். கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க! கன்னித் தமிழ் வாழ்க! கம்பனடிப் பொடி வாழ்க!



# பிழை திருத்தங்கள்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| பதிப்பு விபரம் | 2 | மணிமன்டபம் | மணிமண்டபம் |
| மலரின் இதழ்கள் | 12 | வாய்திருமோ | வாய்த்திடுமோ |
| 2 | 3 | சுப்பாராயன் | சுப்பராயன் |
| 5 | 28 | சசல | சகல |
| 7 | 21 | அரயல் | அரசியல் |
| 8 | 33 | சுதத்திரப் | சுதந்திரப் |
| 9 | 13 | இருத்தன | இருந்தன |
| 10 | 26 | அளப்பரும் | அளப்பெரும் |
| 12 | 27 | சிற்தளவு | சிறிதளவு |
| 14 | 5 | எடுத்துக்காட்டாவும் | எடுத்துக்காட்டாகவும் |
| 15 | 24 | அவுர்களுடைய | அவர்களுடைய |
| 17 | 34 | துறைபோயவர்கள் | துறைபோனவர்கள் |
| 21 | 33 | (1952) | (1982) |
| 22 | 2 | யிருந்தார்கள் | இருந்தார்கள் |
| 23 | 22 | பிள்ளையார் | பிள்ளையார் |
| 24 | 3 | எழுதுகிறீர்களே | எழுதுகிறீர்களே |
| 24 | 27 | என்கிறோம் | என்றோம் |
| 25 | 27 | காந்தீய | காந்திய |
| 25 | 29 | தேரற்றம் | தோற்றம் |
| 26 | 27 | அடியேம் | அறியோம் |
| 28 | 4 | அறிவர்கள் | அறிஞர்கள் |
| ,, | 8 | காணேம் | காணோம் |
| 30 | 16 | லருத்திக் | வருத்திக் |
| ,, | 22 | கம்பன | கம்பன் |
| 31 | 20 | முதறிவர் | மூதறிஞர் |
| 32 | 24 | முதன்மைத் தாய | மும்மைத்து ஆய |
| ,, | 26 | தொன்மை | தொல்லை |
| ,, | 29 | தமைந்த | தறைந்த |
| 33 | 3 | இதுவல்லால் | அதுவல்லால் |
| ,, | 4 | அறிவோம் | அறியோம் |
| ,, | 8 | அமயத்தும் | சமயத்தும் |
| ,, | 31 | சும்பன் | கம்பன் |
| 34 | 12 | சுந்தாம் | சுந்தரம் |
| 36 | 6 | கம்மனடிப்பொடி | கம்பனடிப்பொடி |
| ,, | 9 | மரியதைப்படி | மரியாதைப்படி |

| | | | |
|---|---|---|---|
| 36 | 19 | ஆக்சாரியார் | ஆச்சாரியா |
| 38 | 16 | இராஜியை | இராஜாஜியை |
| ,, | 23 | இவ்வருடம் | அவ்வருடம் |
| 39 | 16 | அமரப் புகழுடன் | அமராப் புகழுடன் |
| 41 | 1 | உலக வரலாற்றில | உலக வரலாற்றில் |
| 43 | 17 | புதுயையடுத்த | புதுவையையடுத்து |
| 45 | 7 | எமுதினேன் | எழுதினேன் |
| 50 | 9 | கம்பனவிழா | கம்பன் விழா |
| ,, | 9 | அதற்காய | அதற்காக |
| 51 | 3 | மெய்யாம் | மெய்யான |
| 52 | 2 | மனமாறப் | மனமாரப் |
| 53 | 14 | சிவைபாலா | சிவபாலா |
| 54 | 9 | பொடியரர் | பொடியார் |
| 56 | 31 | மசிழ்ந்திருக்கின்றேன் | மகிழ்ந்திருக்கின்றேன் |
| 57 | 22 | அந்தனேக் | அத்தனேக் |
| 58 | 12 | அன்னெரு | அன்றெரு |
| 59 | 23 | இகுந்தார்கன் | இருந்தார்கள் |
| 63 | 2 | எத்தனே | எத்தனே |
| ,, | 12 | விம்முகினறேன் | விம்முகின்றேன் |
| 64 | 6 | சொலலெளிதோ? | சொல்லெளிதோ? |
| 68 | 1 | சூக்குமமாக | சூக்சுசமமாக |
| ,, | 5 | பேரருள் | போருள் |
| ,, | 22 | சிதல்களேப் | சிதரல்களேப் |
| ,, | 28 | "சா. கா" | "சா. க" |
| ,, | 28 | அவளர்களது | அவர்களது |
| ,, | 30 | மேட்டிலும் | சமாதியிலும் |
| 70 | 23 | கவியரர் | கவியரசர் |
| ,, | 21 | தாகுரிலிருந்து | தாகூரிலிருந்து |
| ,, | 32 | கம்பன | கம்பன் |
| ,, | 33 | தாகுரின் | தாகூரின் |
| 74 | 32 | எற்றத்தாழ்வு | ஏற்றத்தாழ்வு |
| 75 | 13 | அவர்கள் | அவர்களே |
| 78 | 9 | "மனிப்பர்ஸ்" | "மணிப்பர்ஸ்" |
| ,, | 19 | சுலந்து | கலந்து |
| 80 | 1 | கம்பரென்மைப்பதா? | கம்பரென்றழைப்பதா? |
| ,, | 14 | வடிவமைப்பட்டு | வடிவமைக்கப்பட்டு |
| ,, | 15 | தின்னுக் | தின்னும் |
| 81 | 18 | பேரைவையின் | பேரவையின் |